# போர்வாள்

வாள் 5, வீச்சு 32

May 10, 1952

Record no. 2368

*Pōrvāḷ*

*Vāḷ 5, vīccu 32*

*May 10, 1952*

Record no. 2368

10-5-1952 M.Y.M M BANGALORE


# போர்வாள்

வாள் 5 வீச்சு 32

10-5-52 சனிக்கிழமை

ஆசிரியர்கள்:

காஞ்சி, மணிமொழியார்

... இளஞ்செழியன் B.A. Hons

துணை ஆசிரியர்:

காஞ்சி கல்யாணசுந்தரம்

விலை அணா 2


# வந்தார்! தந்தார்!

**வந்தார்! தந்தார்!**—கூவுகிறான் "ஆனந்தவிகடன்" குதூகலத்துடன்.

**வந்தார்! தந்தார்!**—கொக்கரிக்கிறது "கல்கி" கும்மாளம் போட்டுக்கொண்டு.

**வந்தார்! தந்தார்!**—தீட்டுகிறான் "மித்திரன்" தீவிரமான ஆனந்தத்துடன்.

**வந்தார்! தந்தார்!**—எழுதுகிறது "தினமணி" மட்டற்ற மகிழ்ச்சியுடன்.

**வந்தார்! தந்தார்!**—பேசிப் பேசிப் பெருமையடைகின்றனர் இதுவரை தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டிருந்த எல்லாத் தேசிய தீரர்களும்.

**வந்தார்! தந்தார்!**—கண்ணிலே ஆனந்த ஒளி வீச வீச, இன்ப நடை போடுகின்றனர் என். ஜி. ஓ. க்களிலே பலர்.

வந்தார்! தந்தார்!—எங்கும் இதேதான் பேச்சு! எல்லோரிடையேயும் இதேதான் உரையாடல்!

ஆச்சாரியார் வந்தார்! என். ஜி. ஓ. க்களுக்கு இன்ப வாழ்வு தந்தார்!—சென்னை மாகாணத்தில் பற்பல இடங்களிலும் இப்படித்தான் பேசிக்கொள்ளப்படுகிறது.

கண்டறியாதன கண்டோம்: என். ஜி. ஓ. க்களுக்கெல்லாம் சுகம் பல வந்திடக் கண்டோம் என்று காங்கிரஸ் ஏடுகளெல்லாம் கட்டுரை தீட்டத் தொடங்கிவிட்டன.

தேசிய பிரசாரகர்கள், திக்கெட்டும் சென்று ஊரையெல்லாம் கூட்டி, "பார்த்துக் கொண்டீர்களா மகா ஜனங்களே வந்ததும் வராததுமாக எங்கள் ராஜாஜி சர்க்கார் ஊழியர்களுக்கு எவ்வளவு பெரும் நன்மைகளைச் செய்துவிட்டார்" என்று சுயபுராணப் பெருமை பாட ஆரம்பித்துவிட்டனர்.

"ஆடு பாம்பே—மகிழ்ந்தாடு பாம்பே—என். ஜி. ஓ. க்களுக்கெல்லாம் இன்பநிலை கிடைத்துவிட்டதென்று ஆடுபாம்பே" என்று காங்கிரஸ் கவிஞர்களெல்லாம் புதிய கானம் பாடத் தொடங்கிவிட்டனர்.

ராஜரிஷி ராஜாஜி வந்தார்—என். ஜி. ஓ. க்களுக்கு ராஜ வாழ்வை நல்ல வாழ்வை உடன் கொண்டு வந்தார் என்று மாஜி தமிழரசுவாதி ம. பொ. சிவஞானம் பக்கமேளம் கொட்ட ஆரம்பித்துவிட்டார்.

சின்னதுகளும் பெரியதுகளும் விருதுகளும் நாமங்களும் "ஆஹா ராஜாஜி! அற்புதம் சாதித்துவிட்டார்! என். ஜி. ஓ. க்களையெல்லாம் வாழவைத்துவிட்டார்!" என்று ஓட்டை முரசை ஒலிக்கத் தொடங்கிவிட்டன.

ஆம்! ராஜாஜி வந்தார், என். ஜி. ஓ. க்களுக்கு ஆனந்த வாழ்வைத் தந்தார் என்கிற கீதம் திக்கெட்டிலும் ஒலிக்கிறது இன்று. காங்கிரஸ் வட்டாரத்தில் அந்தப் பேச்சு ஓயாமல் பேசப்படுகிறது.

அப்படியென்ன சாதித்துவிட்டார் ராஜாஜி இப்படியெல்லாம் குதூகலமும் கும்மாளமும் புறப்படுவதற்கு?

என். ஜி. ஓ. க்களுக்கு என்ன நன்மையைச் செய்துவிட்டார்?

அவர்களுடைய துயரத்தை, வேதனையை, சங்கடங்களை எந்த அளவுக்கு நீக்கிவிட்டார்?

பாலைவனமாகக்கிடக்கிற அவர்களுடைய வாழ்க்கையை எந்த அளவுக்கு ஆச்சாரியார் பூஞ்சோலையாக மாற்றி இருக்கிறார்?

விகடனும் கல்கியும் தினமணியும் தினசரியும் ஆனந்த கீதம்

(4-ம் பக்கம் பார்க்க)

Best copy available.

# ராஜாஜி சூழ்ச்சி—ஜவகர் வீழ்ச்சி

## கணைகள் தொடுக்கிறார் காகபட்டர்!

### தலைவர்கள் மோதுதல்—தொண்டர்கள் திகைப்பு!

★

"மொழிவாரியாக மாகாணங்களைப் பிரித்து அமைக்கவேண்டுமென்பது கொள்கையளவில் நல்லதுதான். ஆனால் இப்போது அந்தக் கொள்கையை நடைமுறைக்குக் கொண்டுவரக் கூடாது."

"வேறு அவசரமான பிரச்சினைகள் ஆயிரமாயிரம் இருக்கும்போது, இந்தப் பிரச்சினைக்கு இப்போதென்ன அவசரம்?"

"இந்தியாவில் ஒற்றுமைஉணர்ச்சியைக் கட்டிக் காத்துப் போற்றி வளர்க்கவேண்டியதே நம்முடைய முதற்பெருங்கடமை. மொழிவழி மாகாணப் பிரச்சினையை வேறோர் சமயம் பார்த்துக் கொள்ளலாம்."

"மொழிவழி மாகாணப் பிரச்சினையைச் சிறிது காலத்திற்கு நாம் முற்றிலும் மறந்திருப்பதே நல்லது. அந்தப் பிரச்சினையில் நம்முடைய கவனம் சென்றுவிடுமானால் வேறு பல முக்கியமான பிரச்சினைகளைக் கவனிக்க நமக்கு நேரமில்லாமல் போய்விடும்."

"நாட்டிலே பிளவு உணர்ச்சியையும், வேற்றுமை மனப்போக்கையும், மாகாணப் பித்தையும் குறுகிய எண்ணங்களையும் வளர்க்கவே மொழிவழி மாகாணக் கிளர்ச்சி பயன்படும்."

"மீண்டும் மீண்டும் நான் சொல்லுகிறேன். மொழிவழி மாகாணப் பிரிவினை இப்போது வேண்டாம்—பிறகு பார்த்துக் கொள்ளலாம்."

பண்டித ஜவகர்லால் நேரு, சென்ற ஐந்து ஆண்டுகளாக, இப்படித்தான் பேசி வருகிறார்.

மொழிவழி மாகாணப் பிரிவினை என்கிற பேச்சை யார் எடுத்தாலும் அவர்கள்மீது கடுங்கோபத்தைப் பொழிந்துவருகிறார்.

நாங்கள் ஆட்சிப்பீடம் ஏறினால் நாங்கள் செய்ய இருக்கிற முதற்காரியம் மொழிவழி மாகாண அமைப்புத்தான் என்று முன்னரெல்லாம் வீரமுழக்கமிட்டவர், இதே அலகாபாத் பண்டிதர்தான்.

ஆனால் இவரேதான் இப்போது மொழிவழி மாகாணப்பிரிவினையை வன்மையாக எதிர்த்துக் கடுமையாகக் கண்டித்து வருகிறார்.

எந்த ஊருக்குப் போனாலும் சரி, மொழிவழி மாகாணக் கோரிக்கையைக் கண்டித்து இரண்டுவார்த்தைகளாவது பேசாமல் இருப்பதில்லை பண்டிதர் நேரு.

செய்யத்தான் வேண்டும் ஆனால் இப்போது வேண்டாம் என்கிற பல்லவியை இவர் பாடாத வேளையில்லை—பேசாத மேடையில்லை.

அவர் சுற்றி வளைத்துப் பேசுவதில்லை—பூசி மெழுகி மறைப்பதுமில்லை—திட்டவட்டமாகவும் அழுத்தந்திருத்தமாகவும் ஐயந்திரிபுக்கு இடமின்றியும் கூறிவருகிறார் — மொழிவழி மாகாண அமைப்பு இப்போது கூடாது கூடாது என்று முழக்கமிட்டு வருகிறார்.

மொழிவழி மாகாண அமைப்பு இப்போதே நடைபெற்றாக வேண்டும் என்று எண்ணுகிற தேசியவாதிகள்கூட, தங்கள் தலைவர் நேரு இப்படி முடிவுசெய்துவிட்ட காரணத்தால், இந்தப் பிரச்சினையைப் பொறுத்தவரை, மௌனசாமிகளாக மாறிவிட்டனர். பேசாவிரதம் பூண்டுவிட்டனர்.

அதுமட்டுமல்ல வேடிக்கை. சில தேசிய தீரர்கள் பண்டித நேருவின் பல்லவிக்கு அனுபல்லவி பாடவும் தொடங்கிவிட்டனர்.

ஆமாம், அவர் கூறுவது நியாயம் தான்—இப்படிப் பேச ஆரம்பித்துவிட்டனர் பல அசோகசக்ரதாரிகள்.

"பிளவு மனப்பான்மை இப்போது வளரக்கூடாது என்கிறார். வளரத்தான் கூடாது" — இப்படி எழுத ஆரம்பித்துவிட்டன பல கல்கிகள், விகடன்கள்.

"உணவுப்பிரச்சினை உள்ளத்தை உலுக்குகிற நேரத்தில் மாகாண அமைப்புப் பிரச்சினைக்கு என்னய்யா அவசரம்?"—கோபத்துடன் கேட்கத் தொடங்கிவிட்டனர் பல ஜவஹர் சீடர்கள்.

மொழிவழி மாகாணம் வேண்டும் என்று யாராவது கேட்டால், அப்படிக் கேட்டவரை ஜவஹரின் விரோதி என்று எல்லோரும் கருதும் அளவுக்கு, ஜவஹர், மாகாணப் பிரிவினையை எதிர்த்து ஒரு போர் முனையையே அமைத்துவிட்டார்.

இன்றையதினம், காங்கிரஸ் கட்சிக்குள்ளே, யாராவது ஒருவர், மொழிவழி மாகாணம் உடனே தேவை என்று பேசுவாரானால், அவர், நிச்சயமாக, பண்டித நேருவுடன் முரண்பாடு கொண்டவர் என்பதை யாரும் கூறிவிடலாம். அந்த அளவுக்கு நிலைமையை வளர்த்துவிட்டார் பண்டித நேரு.

காங்கிரஸ் கட்சிக் கூடாரத்தில், யார் யார் நேருவுக்கு வேண்டியவர்களோ, யார் யார் நேருவையே தங்கள் தனிப்பெரும் தலைவராகக் கருதுகிறார்களோ, யார் யார் நேரு கிழித்த கோட்டைத் தாண்டாத அத்யந்த சிஷ்யர்களாக இருக்கிறார்களோ, அவர்கள் அத்தனைபேரும், மொழிவழி மாகாண அமைப்பு இப்போது கூடாது கூடாது என்று ஒருமுறைக்குப் பலமுறை பேசித் தீர்த்துவிட்டார்கள்.

அதுபோலவே, காங்கிரஸ் கட்சித் தோழர்களில், யார் யார் நேருவின் போக்கைக்கண்டு கோபமும் கொந்தளிப்பும் கொண்டவர்களாக இருக்கிறார்களோ, யார் யாருக்கு நேருவின் தலைமை என்றால் வேப்பங்காயாகவும் எட்டிக் காயாகவும் காணப்படுகிறதோ, யார் யார் பண்டிதரின் தலைமை மாறினால்தான் காங்கிரஸ் கட்சி உருப்படும் என்று கருதுகிறார்களோ, அவர்களெல்லாம், மொழிவழிப்பிரிவினை தேவை தேவை என்று பல்லவி பாடி முடித்துவிட்டார்கள்;

"மொழிவழிப் பிரிவினை இப்போது கூடாது"—இப்படிப் பேசுகிற காங்கிரஸ் வாதி பண்டித ஜவஹரின் நண்பன் அல்லது தோழன் அல்லது தொண்டன். அல்லது ஆதரவாளன்!

"மொழிவழிப் பிரிவினை இப்போதே வேண்டும்" — இப்படி முழக்கமிடுகிற தேசியவாதி, நேருவின் பகைவன் அல்லது எதிர்ப்பாளன் அல்லது முரண்பட்ட போக்கினன் அல்லது அவர் தலைமையை மறுப்பவன்.

இதுதான் காங்கிரஸ் கட்சியின் இன்றைய அகராதி.

இந்த நிலையிலே, செல்வாக்கு மிக்க ஒரு காங்கிரஸ் தலைவர், மொழிவழி மாகாணப் பிரிவினை இப்போதே வேண்டும் என்று பேசுவாரானால், அவருக்கும் நேருவுக்குமிடையே ஒரு பெரிய பிளவு இருக்கிறது என்பதை விளக்க வேறு ஆதாரமே தேவையில்லை.

அந்தர் ஆச்சாரியார், மொழிவழி மாகாண அமைப்பு உடனே செய்யப்பட்டாக வேண்டுமென்று இந்த வாரம் பேசியிருக்கிறார்.

"மொழிவாரியாக மாகாணங்களைப் பிரிப்பது மிகவும் நல்லது.

"செய்யவேண்டும் என்று எண்ணுகிற காரியத்தையும் உடனே செய்து முடிப்பது தான் நல்லது.

"எவ்வளவுக் கெவ்வளவு இந்தக் காரியம் செய்யப்பட வேண்டிய காலத்தை ஒத்திப் போடுகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு, பிற்காலத்தில், இந்தக் காரியத்தைச் செய்து முடிப்பது கடினமானதாக மாறிவிடும்.

"நிர்வாக சௌகரியத்தை முன்வைத்துப் பார்த்தால் கூட, மாகாணங்கள் மிகப் பெரிய அளவினவாக இருப்பதைவிட, சிறிய அளவுடையனவாக இருப்பதே நல்லது.

"ஆகவே, எப்படிப் பார்த்தாலும், மொழிவழியாக மாகாணங்களை அமைப்பது நல்லது என்றே ஏற்படுகிறது."

ஏப்ரல் 30-ம் தேதியன்று, சென்னையில், பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில்தான், இப்படிக் கூறியிருக்கிறார் சென்னை மாகாணத்துக்குல்லூகபட்டர்.

"மொழிவாரி மாகாணப் பிரிவினை இப்போது கூடவே கூடாது என்று ஓயாமல் பேசிவருகிறார் பண்டித ஜவகர்.

இல்லை—அது இப்போதே வேண்டும் என்று அழுத்தந்திருத்தமாகக் கூறுகிறார் பிரார்த்தனைப் பிரதமர்.

ஜவகர் கூறுவதை ஆச்சாரியார் எதிர்க்கிறார். மிகத் தெளிவான முறையில், கண்ணுடையவர் அனைவரும் காணத்தக்க முறையில், எதிர்க்கிறார்.

கூடாது—இப்படிப் பேசுகிறார் ஜவஹர்.

இல்லை — வேண்டும் — இப்போதே—இப்படிப் பேசுகிறார் ஆச்சாரியார்.

ஜவஹரை மறுத்து, மறுத்தா—அல்ல—எதிர்த்து, போர்க்கொடி உயர்த்துகிறார் ஆரியகுல தலைவர்.

அலகாபாத் பண்டிதருக்கும் நவீன கால சாணக்கியருக்குமிடையே ஒரு பெரிய பிளவு இருந்துவருகிறது என்பது இந்த வேறுபாட்டின் மூலம் திட்டவட்டமாகத் தெரியவருகிறது.

ஆச்சாரியார் இவ்வளவு வெளிப்படையாக நேருவின்மீது போர் தொடுத்திருப்பதற்குக் காரணம் என்ன?

நேருவின்மீது ஆச்சாரியாருக்கு என்ன கோபம்?

ஏன் இந்தப் போக்கைக் கொள்ளத் தொடங்கிவிட்டார் ஆச்சாரியார்?

இந்தக் கேள்விகளுக்கு ஏற்ற விடையை நாம் கண்டறியவேண்டுமானால், சென்ற மூன்றாண்டுகால காங்கிரஸ் அரசியல் வரலாற்றைக் கொஞ்சம் பொறுமையுடன் நாம் புரட்டிப் பார்த்தாகவேண்டும்.

* * *

இப்போது நடைமுறையில் இருந்துவரும் இந்திய அரசியல் திட்டம், ஏறத்தாழ மூன்றாண்டுகளுக்கு முன்பு, அரசியல் அமைப்பு மன்றத்தால் நிறைவேற்றி முடிக்கப்பட்டது.

அப்படி நிறைவேற்றப்பட்ட நேரத்தில் தென்னாட்டு சாணக்கியர் ஆச்சாரியார் வடநாட்டு டில்லியில் கவர்னர் ஜெனரலாகக் காட்சி அளித்துக்கொண்டிருந்தார்,

புதிய அரசியல் திட்டம் அமுலுக்கு வரும் நாளிலிருந்து கவர்னர் ஜெனரல் என்கிற பதவி இல்லாமற்போய், ஜனாதிபதி என்கிற புதிய பதவி ஒன்று உருவாகிவிடுகிறது.

அப்படி உருவாகிற புதிய பதவிக்கு ஆச்சாரியாரையே நியமித்துவிடலாம் என்று முடிவு செய்தார் பண்டித ஜவஹர்.

ஆனால் இரும்பு மனிதர் சர்தார் படேல் அப்போது உயிரோடிருந்தார்,

ராஜேந்திர பிரசாத்தான் ஜனாதிபதியாக வரவேண்டும் என்று அவர் முடிவு செய்துவிட்டார்.

ஆச்சாரியார் ஜனாதிபதியாக வருவதுதான் தனக்கு நல்லது, அவர் அந்தப் பதவியில் இருப்பதுதான் தனக்கு அனுகூலம் என்று எண்ணமிட்டார் பண்டித நேரு.

ஆனால் ராஜேந்திரர்—ஜனாதிபதியாக ஜொலிப்பதுதான் தனக்கு நல்லது, அவர் அந்தப் பதவியில் கொலுவீற்றிருந்தால்தான் தன்னுடைய செல்வாக்கு வளரும் என்று முடிவுசெய்தார் சர்தார் படேல்.

(10-ம் பக்கம் பார்க்க)

## மஜீத் குடும்ப நிதி

26—4—52-ல் இலங்கை பிரபல தி. மு. கழகப் பேச்சாளர் தோழர் T. M. பீர் முகம்மது அவர்களது தலைமையில் நடைபெற்ற "உழைப்பாளி" ஆதரவாளர்கள் கூட்டத்தில் தியாக வீரன் மஜீது குடும்ப நிதி வசூலிக்க கதிரவன் அவர்களைத் தலைவராகவும், "உழைப்பாளி" ஆசிரியர் செவல்மணி அவர்களை செயலாளராகவும், வீர. மதியழகன், P. அருணகிரி, S. K. முகைதீன், A. A, ஜப்பார், P. A. சந்தியாகு, P. M. சேகு முகம்மது, S. மீரான், இவர்களை உறுப்பினர்களாகவும் கொண்ட நிதிக்குழு அமைக்கப்பட்டிருக்கிறது.

இலங்கை வாழ் அன்பர்கள் நிதியளிக்க விரும்பினால் கீழ்காணும் முகவரிக்கு அனுப்பிவைக்கக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்:

செவல்மணி
22, டயஸ்பிளேஸ்
கொழும்பு-12.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பாடி தேசிய நடனமாடி ராஜாஜி பரணி பாடுகின்றனவே, அப்படிப் பாடப்பட வேண்டிய அளவுக்கு அந்த ராஜரிஷி ராஜாஜி என். ஜி. ஓக்களுக்கு எந்தப் புது வாழ்வை உருவாக்கிக் கொடுத்துவிட்டார்? எந்தப் புதிய தரணிக்கு அழைத்துச் சென்று அவர்களை யெல்லாம் குடியேற்றிவிட்டார்?

எவரும் கேட்பர் இத்தகு கேள்விகளை.

வந்தார் ஆச்சாரியார், தந்தார் என். ஜி. ஓ. க்களுக்கு என்கிறார்களே தேசிய திலகங்கள், வந்த ஆச்சாரியார் தந்த இன்பம் யாது?

யாரும் கேட்காமலிருக்க மாட்டார்கள் இந்த ஐய வினாவை.

வந்தார்—தந்தார் — என்கிறார்களே, எதைத் தந்தார் ராஜாஜி?

மத்திய சர்க்காரின் கீழ்த்தர சிப்பந்திகளுக்கு எந்த அளவு சம்பள விகிதம் தரப்படுகிறதோ அதே அளவு சம்பளத்தை எங்களுக்கும் தரவேண்டும் என்று கேட்டார்களே என் ஜி ஓ க்கள், அந்தக் கோரிக்கையை நிறைவேற்றியிருக்கிறாரா ராஜாஜி?

இல்லை!

வீட்டு அலவன்ஸ், பஞ்சப்படி, லீவு வசதி ஆகியவற்றை நியாயமான அளவுக்கு உயர்த்த வேண்டுமென்று பணிவுடன் வேண்டினார்களே, அந்தவேண்டுகோளுக்குத் தன் சம்மதத்தை அறிவித்திருக்கிறாரா ஆச்சாரியார்?

கிடையாது.

காலை முதல் மாலைவரை ஓயாமல் உழைக்கிறோம், அப்படி உழைத்தும் நாங்கள் பெறுகிற ஊதியம் வயிறார உண்பதற்கும் போதுமானதாக இல்லை, ஆகவே அந்த ஊதியத்தைச் சிறிதேனும் உயர்த்திக் கொடுங்கள் என்று கேட்டார்களே என் ஜி.ஓ.க்கள், அந்த வேண்டுகோளை ஒப்புக்கொண்டுவிட்டாரா ராஜாஜி?

அதுவுமில்லை.

அப்படியானால் என்னதான் சாதித்துவிட்டார் ராஜாஜி என். ஜி. ஓக்களுக்காக?

தரப்படும் சம்பளத்தையும் உயர்த்தவில்லை—மத்திய சர்க்கார் தரும் அளவு சம்பளம் தரவும் ஒப்பவில்லை—வீட்டு அலவன்சையும் அதிகரிக்கவில்லை—பஞ்சப்படியையும் கூடுதலாக்கவில்லை — லீவு வசதிகளையும் பெருக்கவில்லை—என்றும் இன்ப வாழ்வைத் தந்துவிட்டார் என். ஜி. ஓ.க்களுக்கு என்கிறார்களே, அது எத்தகைய இன்ப வாழ்வு?

உண்மையில் எதைக் கொடுத்திருக்கிறார் ஆச்சாரியார்?

மூன்னூறு ரூபாய்க்கு மேற்படாமல் மாத ஊதியம் வாங்குகின்ற என். ஜி. ஓ. க்களின் பிள்ளைகள் முதல் வகுப்பிலிருந்து எட்டாவது வகுப்பு வரையில் படிக்கிறவர்களாக இருந்தால், அவர்கள், இனி, சம்பளமே இல்லாமல் இலவசமாகப் படிக்கலாமாம். அந்தப் பிள்ளைகள், நான்காவது பாரம் முதல் ஆறாவது பாரம் வரை படிக்கிறவர்களாயிருந்தால், அவர்கள், இனி, முழுச்சம்பளம் கட்ட வேண்டியதில்லை. அரைச் சம்பளம் மட்டுமே கட்டினால் போதுமாம்.

காருண்யம் மிகுந்த ஆச்சாரியார், கண்ணியம் மிகுந்த உள்ளத்தோடு கஷ்டம் மிகப் பட்டுக்கொண்டிருக்கும் என். ஜி. ஓ.க்களுக்காக மனம் இறங்கிச் செய்திருக்கிற மகத்தான உதவி இதுதான்!

இவ்வளவுதானா இவர் செய்த உதவி என்கிறீர்களா?

ஆமாம், இவ்வளவுதான், இவ்வளவேதான் ஆச்சாரியார் செய்திருக்கிற அற்புதமான உதவி.

இவ்வளவு அற்புதமான உதவியைச் செய்துவிட்டதால் கண்டறியாதன கண்டோம் என்று தம்பட்டம் அடிக்க ஆரம்பித்துவிட்டார்கள் தேசிய வாதிகள்

இந்தச் சிறிய உதவியை, ஆச்சாரியார், சென்னை சர்க்காரின் சொந்தப் பணத்திலிருந்து தவறாது செய்ய இருக்கிறாரா?

அதுவும் நிச்சயமில்லை.

ஜில்லா போர்டுகள், முனிசிபாலிடிகள், தனிப்பட்ட சங்கங்கள், தனி மனிதர்கள், இப்படிப் பட்டவர்கள்தான் பெரும்பாலும் பள்ளிக்கூடங்களை நடத்தி வருகிறார்கள்.

சர்க்கார் ஊழியர்களின் பிள்ளைகளுக்கு அந்தப் பள்ளிக்கூடத்து அதிகாரிகள் சம்பளம் வாங்காமல் பாடம் சொல்லித் தரவேண்டுமென்று அந்த அதிகாரிகளைக் கட்டாயப்படுத்தலாம் என்று கருதியிருக்கிறாராம் ஆச்சாரியார்!

எப்படியிருக்கிறது வேடிக்கை?

பக்கத்துவீட்டுத் திருமண விருந்துக்குப் பரம மகிழ்ச்சியுடன் போயிருந்தான் சோம்பேறி சொக்கன்.

சொக்கனின் மனைவி குப்பாயியும் போயிருந்தாள் விருந்துக்கு.

பந்தியிலே ஒருவனை சந்தடியின்றி உட்கார்ந்தான் சொக்கன்.

விருந்தைப்பரிமாறும் வனிதாமணிகளிலே ஒருத்தியானாள் சொக்கனின் மனைவி, குப்பாயி.

நெய்விடும் முறைவந்தபோது, குப்பாயி, சொக்கனுக்கு நெய்யை அள்ளி அள்ளி ஊற்றினாள் அளவு—வரை — முறை எதுவுமின்றி.

தன் வீட்டிலே நெய்யை விடுகிறபோது கெஞ்சிக் கெஞ்சிக்



கேட்டாலும் இரண்டு சொட்டுக்குமேல் விடமுடியாது என்று மறுக்கும் குப்பாயி, இப்போது, நெய்யை தண்ணீராக ஓடவிடுகிற தனி அற்புதத்தைப்பார்த்துவிட்டு, அண்டை வீட்டு நெய்யே—என் பெண்டாட்டி கையே— என்று ஆச்சரியத்தோடு கூறினானாம்.

ஆச்சாரியார், என். ஜி ஓ. க்களுக்கு உதவி செய்யப்போவதாகக் கூறுவதும், அண்டை வீட்டு நெய்யை அளவின்றி ஊற்றிய குப்பாயியின் கதைபோல வேதான் இருக்கிறது.

பள்ளிக்கூடங்களை நடத்துபவர்களின் பணத்தையெடுத்து இவர் என். ஜி ஓ.க்களுக்குத் தானம் செய்ய இருக்கிறார்!

கடைத் தேங்காயை, பணம் கொடுக்காமல் எடுத்து, வழிப் பிள்ளையாருக்கு உடைக்க நினைக்கிறார்!

இந்தப் பூணூல் பூண்ட புதுமைக்குத்தான் உதவி என்று பெயராம்! என். ஜி. ஓ.க்களுக்குப் புதுவாழ்வு என்று பொருளாம்! கீழ்த்தர சிப்பந்திகளுக்கு நல்ல காலம் என்று அர்த்தமாம்!

கூறுகிறான் விகடன். குதிக்கிறது கல்கி. கும்மாளம் போடுகிறது தினமணி.

முழுப் பூசனியை இப்படி கையளவுள்ள சோற்றில் மறைக்க முயல்கிறது தேசிய உலகம்.

முடிகிற காரியமா அது?

ஆச்சாரியாரைப் பாராட்ட வேண்டுமென்கிற நப்பாசை எவ்வளவுதான் இருந்தாலும் அதற்காக இப்படியா கேழ்வரகில் நெய் வடிகிறது என்று முழுப் பொய்யை மனம் துணிந்து கூற வேண்டும்?

ஆசைவெட்கமறியாது என்று கூறுகிறார்களே, அது, தேசிய ஏடுகளைப் பொறுத்தவரை முற்றிலும் உண்மை என்றல்லவா ஆகிவிட்டது இந்த நிகழ்ச்சியின் மூலம்!

செய்யஇருக்கிற உதவியோ அற்பமானது! அந்த அற்பமான உதவியையும் ஆச்சாரியார் சர்க்கார் பணத்தில் செய்யப் போவதில்லை! வேறு யார் பணத்திலோ செய்ய இருக்கிறார்!

போகட்டும்! பிறர் பணத்திலாவது, அற்ப உதவியையாவது செய்யவேண்டும் என்கிற எண்ணம் பிறந்ததே ஆச்சாரியாருக்கு, அதற்காக அவருக்கு நன்றி செலுத்துவோம்! வேண்டுமானால் அவருக்கு ஒரு 'ஜே'யும் போட்டுத் தொலைப்போம்!

ஆனால், பிறர் பணத்தில் செய்யும் இந்த அற்ப உதவியையும் **பெரும்பாலும் பிராமண சமுதாயத்திற்கே போய்ச்சேரும்படியாக,** உதவி திட்டத்தை உருவாக்கியிருக்கிறாரே ஆச்சாரியார், அதை நினைத்துப் பார்க்கிற போதுதான், ஆச்சாரியார், உண்மையிலேயே ஒரு திறமைசாலி என்பதை நாம் மனப்பூர்வமாக ஒப்புக்கொண்டு தீரவேண்டியிருக்கிறது

நான்காவது பாரம் முதல் ஆறுவது பாரம் வரை படிக்கிற சர்க்கார் குமஸ்தாக்களின் பிள்ளைகள் இனி அரை சம்பளம் கட்டினால் போதும் என்கிறார் ஆச்சாரியார்.

பார்ப்பனரல்லாத சமுதாயத்தில், செல்வ நிலையிலும் கல்வி நிலையிலும் முற்போக்கடைந்துள்ள வேளாளர் முதலான ஒரு சிறு கூட்டத்தாரைத் தவிர, ஏனைய பெரும்பாலோர் அனைவரும், பிற்பட்ட வகுப்புகள் என்கிற தலைப்பின் கீழ் வருபவர்களாவர்.

பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த மாணவர்கள் அனைவருக்கும், அவர்கள் பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்கிற காரணத்திற்தாக, ஆட்சியாளர்களால் அரைச்சம்பளம் தரப்பட்டுவருகிறது நெடுங்காலமாக.

ஆகவே, என்.ஜி.ஓ.க்கள், பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருப்பார்களானால், அவர்களுடைய பிள்ளைகளுக்கு ஏற்கனவே அரைச்சம்பள வசதி இருந்துவருகிறது.

அப்படி இருந்துவரும் காரணத்தினால், ஆச்சாரியார் இனி அளிப்பதாகக் கூறும் அரைச்சம்பள வசதி அவர்களுக்குக் கிடைக்காது.

அவர்களைத் தவிர்த்த ஏனைய என். ஜி. ஓ. க்களுக்குத்தான் கிடைக்கும்.

ஏனைய என். ஜி. ஓ.க்கள் என்றால் அதன் பொருள், முற்போக்குப் பார்ப்பனரல்லாதார் என்கிற ஒரு சிறு சாராரும், பிராமண குலம் முழுவதும், என்று பொருள்.

ஆகவே, ஆச்சாரியார் தர இருக்கிற உதவியின் ஒரு பெரும் பகுதி, பிராமண இனத்து என். ஜி. ஓ.க்களுக்கே பயன்படும் நிலையில் இருக்கிறது.

"நீ பிராமண என்.ஜி.ஓ.வா— அப்படியானால் இந்தா அரைச் சம்பளம்!" என்று கூறுகிறது புதிய திட்டம்.

## சீர்திருத்த திருமணம்

ஐயா,

சென்னை, சூளை, நரசிங்கப் பெருமாள் கோவில் தெரு 4-வது எண்ணுள்ள இல்லத்தில் 1-5-52 காலை 9 மணிக்கு தோழர் க. அன்பழகன் தலைமையில் 31-வது வட்டம் தி மு. க. துணைச் செயலாளர் தோழர் க. கதிர்வேலுக்கும், தோழியர் சு. தனலட்சுமி அம்மைக்கும், சீர்திருத்தத் திருமணம் நடைபெற்றது. தோழர் K. A. மதியழகன் தோழியர்கள் அருண்மொழிப் பூங்கோதை மற்றும் பலர் சீர்திருத்த திருமணத்தைப் பற்றியும் மணமக்களை வாழ்த்தியும் பேசினர்.

போர்வாள் வளர்ச்சிக்காக ரூ. ஒன்று நன்கொடை அளிக்கப் பட்டது.

அதே சமயத்தில், இந்தத் திட்டம், பிராமணரல்லாத என். ஜி. ஒக்களில், பிற்பட்ட வகுப்பாரைப் பார்த்து, நீ பிராமணரல்லாத என். ஜி. ஓ. வா—பிற்பட்ட வகுப்பா-அப்படியானால் உனக்குத்தான் ஏற்கெனவே அரைச்சம்பள வசதி கிடைக்குமே—போ, போ, உனக்குக் கிடையாது இந்தப் புதிய உதவி' என்று தெரிவித்து விடும்.

முதல் வகுப்பு முதல் எட்டாவது வகுப்பு வரை படிக்கிற என். ஜி. ஓ. க்களின் பிள்ளைகள் இனி, சம்பளமே கட்டவேண்டியதில்லை என்கிறார் ஆச்சாரியார்.

இந்த வகுப்புகளிலேயும், பிற்பட்ட வகுப்பு மாணவர்கள், அதாவது பார்ப்பனரல்லாத மாணவர்களிலே மிகப் பெரும்பாலோர், இப்போது அரைச் சம்பளமே கட்டி வருகின்றனர்.

இனி இவர்கள் சம்பளமே கட்டவேண்டியதில்லை என்பதால், இப்போது இவர்கள் கட்டிவருகிற அரைச் சம்பளமும் இனி மிச்சமாகும்.

இந்த அளவுக்கு, இந்தப் புதிய ஏற்பாட்டின் காரணமாக, பிராமணரல்லாத என். ஜி. ஓ. க்களுக்கு இலாபம் இருக்கத்தான் செய்கிறது.

ஆனால் இதே சமயத்தில், இதே வகுப்பில் படிக்கும் மாணவர்களைத் தங்கள் பிள்ளைகளாகக் கொண்ட பிராமண என். ஜி. ஓ. க்களுக்கு இந்த ஏற்பாட்டால் கிடைக்கும் இலாபம் எவ்வளவு என்பதைப் பாருங்கள்.

பிராமண என். ஜி. ஓ. க்கள், இப்போது, இந்த வகுப்புகளிற் பயிலும் தங்கள் பிள்ளைகளுக்கு, முழுச் சம்பளமும் கட்டி வருகிறார்கள். இனிமேலோ அவர்கள் சம்பளமே கட்ட வேண்டியதில்லை.

அதாவது, பிராமண என். ஜி. ஓ. க்களுக்கு அவர்கள் இப்போது கட்டிவருகிற முழுச் சம்பளமும் மிச்சமாகும்.

புதிய ஏற்பாட்டின் காரணமாக—நன்றாகக் கவனியுங்கள்-ஒன்று முதல் எட்டாம் வகுப்பு வரை பயிலும் மாணவர்களைப் பிள்ளைகளாகக் கொண்ட என். ஜி. ஓ. க்கள், பிராமணர்களாக இருந்தால் அவர்களுக்கு இனி, முழுச் சம்பளமும் மிச்சமாகும். ஆனால் அவர்கள் பிராமணரல்லாத பிற்போக்கு வகுப்பினராக இருந்தால், அரைச் சம்பளம் தான் மிச்சமாகும்.

உதாரணமாக, இந்த வகுப்புகளிற் பயிலும் ஒரு மாணவன் கட்டவேண்டிய மாத சம்பளம் ரூ 4—0—0 என்று இருக்குமானால், இந்த நான்கு ரூபாயும் இனி மிச்சமாகிறது பிராமண என். ஜி. ஓ. வுக்கு.

ஆனால் பிராமணரல்லாத பிற்போக்கு வகுப்பு என். ஜி. ஓ. வோ அரைச் சம்பளமாகிய ரூபா 2—0—0 தான் கட்டி வருகிறார் இப்போது இனி இந்த இரண்டு ரூபாய் மட்டும்தான் மிச்சமாகும் அவருக்கு.

**பிராமண என். ஜி. ஓ.**

1. இவர் பிள்ளை நான்காம் பாரம் முதல் ஆறும் பாரம் வரை படிப்பவராக இருந்தால், இவர் இனி அரை சம்பளம்தான் கட்டவேண்டும். ஆகவே அரை சம்பளப் பணம் இவருக்கு இனி மிச்சம்.

2. இவர் பிள்ளை முதல் வகுப்பு முதல் எட்டாவது வகுப்பு வரை படிப்பவராக இருந்தால், இவர், இனி முழு சம்பளமும் கட்ட வேண்டியதில்லை ஆகவே பள்ளிச் சம்பளப் பணம் அவ்வளவும் இவருக்கு மிச்சம்.

**பிராமணரல்லாத (பிற்பட்ட) என். ஜி. ஓ.**

1. இவர் பிள்ளை, நான்காம் பாரம் முதல் ஆறும் பாரம்வரை படிப்பவராக இருந்தால, இவருக்குப் புதிய திட்டத்தால, பணம், பைசாவும் மிச்சமாகாது இவர் ஏற்கனவே பிற்பட்ட வகுப்புக்காரர் என்ற காரணத்தை முன்னிட்டு அரைச் சம்பள வசதி பெற்று வருவதால், புதிய அரைச் சம்பள வசதி இவருக்குத் தரப்பட மாட்டாது.

2. இவர் பிள்ளை ஒன்று முதல் எட்டுவரை உள்ள வகுப்புகளிற் பயில்பவராக இருந்தால், இவருக்கு இனி அரைச் சம்பளப் பணம் மட்டும்தான் மிச்சமாகும். பிராமண என். ஜி. ஓ வைப்போல முழுச் சம்பளப் பணமும் மிச்சமாகாது.

(11-ம் பக்கம் பார்க்க)

---

மதுரை மாவட்ட

## பிரச்சார பயிற்சி வகுப்பு

மதுரை மாவட்டம் பிரச்சார பயிற்சி வகுப்பு 1952 மே திங்கள் 21, 22, 23, 23, 24 நாட்களில் பட்டிவீரன்பட்டியில் நடத்த ஏற்பாடுகள் எடுக்கப்பட்டுள்ளன. W. P. A. சௌந்திர பாண்டியனார் அவர்கள் அதற்கான ஏற்பாடுகள் செய்ய இசைந்துள்ளார்.

பிரச்சார பயிற்சி வகுப்பைத் தோழர்கள் இரா. நெடுஞ்செழியன், ஈ. வே. கி. சம்பத் ஆகியோர் நடத்திவைப்பார்கள்.

வகுப்பில் சேருவோர் முன்பே மேடை ஏறிப் பேசிப் பழக்கப்பட்டவராகவும், பயிற்சி மட்டுமே பெறவேண்டியவராகவும் இருக்க வேண்டும். வகுப்பில் சேர விரும்புவோர் அவர் பேச்சாளர் என்பதற்கு அந்தந்த ஊர் கிளைக்கழகத்தின் முத்திரையும், கிளைக் கழக செயலாளரின் கையொப்பமும் வாங்கி விண்ணப்பத் தாள்களை நா. ஆவுடையப்பன் செயலாளர் மாவட்ட தி. மு. கழகம் "பனகல் இல்லம் சோழவந்தான் மதுரைமாவட்டம் என்ற முகவரிக்கு 15—5—52க்குள் அனுப்பிவைக்க வேண்டும்.

தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு மட்டும் பதில் வரையப்படும். அழைப்பு பெற்றவர்களே வகுப்புக்கு வரவேண்டும்.

போக்குவரத்து வழிச்செலவுகள் பயிற்சி பெறுவோரைச் சார்ந்தவை. ஒவ்வொருவரும் சொந்தப் படுக்கையுடன் வரவேண்டும்.

இட வசதி, சாப்பாட்டு வசதி மட்டும் செய்துதரப்படும்.

**நா. ஆவுடையப்பன் செயலாளர்,**
**மதுரை மாவட்டதி. மு. கழகம்.**
**சோழவந்தான்.**





# வெள்ளி தந்த வேதனை

[நா. நிலத்தலைவன், பீ. ஏ. (ஹானர்ஸ்)]

"இந்திய நாட்டுக் கோயில்களில் உள்ள விக்கிரங்களின் மேல் இருக்கிற வெள்ளிக்கு, அளவு கிடையாது. இந்த வெள்ளியை எத்தனையோ நல்ல காரியங்களுக்குப் பயன் படுத்தலாம்....."

தி. மு. க. பொதுச் செயலாளர் அண்ணாதுரையின் அழகுச் சொற்பொழிவில் உதிர்ந்தது அல்ல; எழுத்து மன்னர் மு, கருணாநிதியின் வசனத்தில் கண்ட சொற்கள் அல்ல. 'போர்வாள்' ஏட்டில் கண்ட எழுத்துக்கள் அல்ல. ஆங்கிலப் பேராசிரியரும், அநேக அரிய நூல்களைத் தீட்டியவருமான அறிஞர் சி, ஈ. எம். ஜோட் (C. E. M, Joad) என்பவர் "இந்திய நாகரிகத்தின் கதை" (The Story of Indian Civilization) என்ற நூலில் இவ்வண்ணம் தீட்டியுள்ளார்.

இந்த நாட்டுக் கோயிலிலே கொட்டிக் கிடக்கும் செல்வத்தை நாம் அறியாததல்ல; பணம் பாழாகும் விதம் நமக்குத் தெரியாததல்ல. ஆனால் தி. மு. க. சொன்னால் நாத்திகர் என்றுகூறி அதனாலேயே அவர்களை அடக்கிவிட்டதாகக் கூறும் ஒரு பேதைக்கூட்டம் ஸி. ஈ. எம். ஜோட் கூறினால் என்ன சொல்லும்! விசாலமான பிராகாரங்களும், விரிந்து கிடக்கும் மண்டபங்களும், கல்விக்கூடங்களாக, கலைக்கூடங்களாக மாற வேண்டும் என்று கூறிவருகிறோம்; குதர்க்க வாதிகள் என்று கூறி நம்மை மடக்குகிறார்கள் கூடாத காரியம் என்கிறார்கள் சிலர். ஆனால் காலம் மாறிவருகிறது; நம் கனவு நினைவாகத்தான் போகிறது.

திருப்பதி ஏழுமலையானிடமும், மதுரை மீனாக்ஷியிடமும், திருவாவடுதுறை முதலிய மடங்களிலும் முடங்கிக்கிடக்கும் பணம், கோயில் பெருச்சாளிகளுக்கு கொழுத்த விருந்தாக அமைந்திருக்கிறது. இந்த நாட்டில் ஏழைகள் வாடுகிறார்கள் ஒரு பகுதியிலே; அதே சமயத்திலே மற்றொரு பகுதியிலே பணக்காரர்களும், பகவான் பெயர் சொல்லிப் பிழைப்பவர்களும் பாதாம் அல்வாவிலும், பால் பாயாசத்திலும் மிதந்துகொண்டிருக்கிறார்கள். கோயிலில் உள்ள பணம், ஏழைகளுக்குப் பயன்படவேண்டும்; ஏழைகளின் கல்விக்குப் பயன்படவேண்டும்: ஏழைகள் தொழில் செய்யப் பயன்படவேண்டும். ஆனால் அறிஞர் ஜோட் என்ன சொல்கிறார், பாருங்கள்.

"கோயில் விக்ரகங்களில் உள்ள வெள்ளியை எல்லாம் எடுத்து, வெடியுப்பு அமிலத்தில் கலந்து, அப்போது வெளிப்படும் வெள்ளி நைட்ரேட்டைக் குருடர்களின் கண் பார்வை பெற உபயோகித்தால், இந்தியக் குழந்தைகளில் பல ஆயிரம்பேர் கண்பார்வை பெறக்கூடும்." If some of the silver were stripped away and dissolved in Nitric acid, and the resultant silver Nitrate were applied to the cure of blindness, many Indlans Children who today are blind would be abla to see."

இந்தியாவில் எத்தனை லட்சம் குழந்தைகள் குருடர்களாயிருக்கிறார்கள்? அந்த எண்ணிக்கை அல்லவா ஜோடின் உள்ளத்தைக் குழப்பியிருக்கவேண்டும்? கோயில் விக்ரகங்களின்மேல் அழகாக அமைந்துள்ள வெள்ளி அந்தக் குழப்பம் போக்கும் விளக்கமாக அவருக்குத் தோன்றி இருக்க வேண்டும். அதனால்தான் வெள்ளி நைட்ரேட்டைக் கொண்டு இளம் குழந்தைகளின் குருட்டுத்தனத்தைப் போக்க முற்படவேண்டும் என்று கூறியிருக்கிறார் அவர்.

இந்தப் புண்ணிய பூமியில் எத்தனை லட்சம் மக்கள் கண்ணிழந்தோராய், காட்சிதருகிறார்கள், தெரியுமா? 1911-ல 4,43,653 பேர் குருடர்களாக இருந்தார்கள். அதாவது ஒரு லட்சம் பேரில் 142 பேர் குருடர்கள். 1921-ல் 4,79,637 பேர் குருடர்கள், ஒரு லட்சம் பேரில் 152-பேர் பார்வை இல்லாதவர்கள். 1931-ல் 6,01,370 பேர் குருடர்கள். ஒரு லட்சம் பேரில் 172 பேர் கண்ணில்லாத குருடர்கள்! புள்ளி விவரங்கள் என்ன கூறுகின்றன. குருடர்களின் எண்ணிக்கை ஏறுமுகமாக உள்ளது என்பதைத் தெரியப்படுத்துகின்றன அல்லவா? இப்போது குருடர்களின் எண்ணிக்கை இன்னும் அதிகமாக இருக்கும் என்று கூறவேண்டுமா?

சென்ற இதழ் 'போர்வா'ளில் "நில்லு கண்ணப்பா" என்ற கட்டுரையைப் படித்த நேயர்கள், கண்ணிழந்தவர்களுக்கு இறந்தவர்களின் கண்களைப் பொருத்தும் புதிய முறையைப் பற்றி அறிந்திருக்கக் கூடும். மேலைநாடுகளில் குருட்டுத்தனத்தைப் போக்க எத்தனையோ விதமான முயற்சிகளும், ஆராய்ச்சிகளும் நடத்தப்பட்டு வருகின்றன. குருடர்களுக்காகத் தனிப் பள்ளிக்கூடங்கள் ஆங்காங்கு நடத்தப்பட்டு வருகின்றன. குருடர்கள் செய்யக் கூடியதாகச் சில தொழில்களை அவர்களுக்குக் கற்பித்து, அதன்மூலம் ஓய்வு நேரத்தைப் பயன் தரத்தக்க விதத்தில் செலவிடவும், குருடர்கள் கற்பிக்கப்படுகிறார்கள். சமீபத்தில் "ஹிந்து" இதழில் ஒரு செய்தி வந்தது; குருட்டு மாணவர்கள், இதரர்கள் வியக்கும்படியாக, அருமையாகக் கிரிக்கெட் ஆட்டம் விளையாடினார்களாம். இங்கல்ல; இங்கிலாந்தில்தான்!

நம் நாட்டில் உள்ளவர்கள் இருக்கிற கண்களை மறைத்துக் கொண்டு," "ரெண்டுகண்ணுமில்லாதவன் சாமி! காலணா தருமம் செய்யுங்கள் சாமி!" என்றுதான் பாடுகிறார்கள். கண் இருக்கிறவர்களே கண்ணைப் பயன் படுத்தாத போது கண் இல்லாதவர்களைப் பற்றிக் கவலைப்படுவார் யார்? அங்கொன்றும் இங்கொன்றுமாக உள்ள குருடர் பள்ளிக்கூடங்கள் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் அமெரிக்காவிலும் ருஷ்யாவிலும் குருடர் பள்ளிக்கூடங்கள் வளர்ந்துள்ள அளவுக்கு நம் நாட்டிலே வளரவில்லை, சர்க்கார் ஆதரவு இல்லாத காரணத்தால்; பொருளாதார உதவி கிடைக்காத காரணத்தால். அதே சமயத்தில் எத்தனை எத்தனையோ

(16ம் பக்கம் பார்க்க)

# போர்வாள்

திராவிடர் வார இதழ்

சென்னை 10—5—52 சனிக்கிழமை


# ஹிந்தி ஏகாதிபத்யம்!

## புதிய படையெடுப்பு!

"அக்கிரமமான போக்கு!"

"அநீதியான செய்கை!"

"ஆணவமான நடத்தை!"

"நீதான திட்டம்—தவருன காரியம்!"

"கடைந்தெடுத்த தேசத் துரோகம் இந்தத் தீயசெயல்!"

"கேள்வி கேட்பாடே இடை யாதா இந்த அக்கிரமத்திற்கு?"

"விட்டுவைக்கக் கூடாதப்பா இந்த அநியாயத்தை!"

"ஒழித்துக் கட்டியாக வேண் டும் உடனடியாக."

"ஆமாம்—உடனே செய்ய வேண்டிய காரியம் இது. சிறி தும் தாமதம் செய்யக்கூடாது."

"என்ன ஆணவம் இருந்தால் இந்த நிஜாம், உருதுவைப் போதனு மொழியாக ஆக்கி யிருப்பார்!"

"அதைத்தானே நானும் கேட் கிறேன்? தெலுங்கு மொழி யிருக்க, கன்னடத் தேன் இருக்க, மராத்தியும் உடன் இருக்க, இத்தனை மொழிகளை யும விட்டுவிட்டு உருதுவுக்கு முடிசூட்டு விழா நடத்துவதா? நியாயமா? தருமா? முறைதானு இக் காரியம்?"

"முறைதானு இக் காரியம் என்று மெதுவாகக் கேட்டுப் பயனில்லையப்பா! நாடெங்கும் முழக்கமிட வேண்டும். ஆருமா இந்தப் போக்கு என்று சமஸ் தான மக்களையெல்லாம் கூட் டிக் கேட்கவேண்டும். ஊர் ஊராகக் கூட்டம் போட்டு நிஜாம் அரசரின் இந்த அநியா யத்தை உரத்த குரலில் எடுத்து விளக்க வேண்டும்."

"ஆமாம், நண்பரே, நியாயம் தான் நீர் கூறுவது. ஓர் அறப் போர் வேண்டுமானாலும்தொடுத் தாக வேண்டும் நாம், இந்த அக் கிரமத்தை அழித்தொழிப்பதற் காக."

ஹைதராபாத் ராஜ்யத்தைச் சேர்ந்த காங்கிரஸ் கண்ணிய வான்கள் இப்படித்தான் தீப் பொறி பறக்கப் பேசினர் சில ஆண்டுகளுக்கு முன்பு.

அவர்கள் அப்படிப் பேசிய போது, ஆமாம்—அவர்கள் கூறுவது நியாயம்தான் என்று அவசர அவசரமாக அவர்க ளுக்கு ஆதரவு காட்டினர் ஏனைய பகுதிகளைச் சேர்ந்த பாரத புத்திரர்கள்.

தென்னிந்தியாவில் உள்ள ஒரு முக்கியமான சமஸ்தானம், ஹைதராபாத்.

தெலுங்கு, கன்னடம், ஆகிய மொழிகளைப் பேசுகின்ற மக் களே அங்கு அதிகம்.

உருது மொழியைத் தங்கள் தாய் மொழியாகக் கொண்ட வர்களும் அங்கே இருக்கின்ற னர், ஆனல் அவர்களின் எண் ணிக்கை குறைவு.

ஐதராபாத் சமஸ்தானத்தில் உள்ள ஓரே ஒரு பல்கலைக்கழகம் உஸ்மானிய பல்கலைக் கழகம்.

சென்னைப் பல்கலைக் கழகம், அண்ணுமலைப் பல்கலைக் கழகம், ஆந்திரா பல்கலைக் கழகம் இவை உட்பட, இந்தியாவில் உள்ள எல்லாப் பல்கலைக் கழகங்களி லும், இன்றைய தினம் வரை யில், ஆங்கிலம்தான், போதனு மொழியாக இருந்து வருகிறது.

ஆனல், ஹைதராபாத் சமஸ் தானத்தைச் சேர்ந்த உஸ்மா னியா பல்கலைக் கழகத்தில் மட் டும், ஆங்கிலத்திற்குப் பதிலாக நம் நாட்டு மொழிகளிலேயே எல்லாப் பாடங்களையும் சொல் லித் தருவது என்கிற முடிவுக்கு வந்தார் ஹைதராபாத் மன்னர், சில ஆண்டுகளுக்கு முன்பு.

இந்த முடிவு மிகவும் நல்ல முடிவு, நல்ல உள்ளம் படைத்த எல்லோராலும் பாராட்டப்பட வேண்டிய முடிவு.

இந்தியாவில் உள்ள ஒரு பல் கலைக் கழகத்தின் போதனு மொழி ஓர் இந்திய மொழியாக இல்லாமல் ஓர் அந்நிய நாட்டு மொழியாக இருப்பது இந்திய மக்களுக்கெல்லாம் அவமானத் தைத் தருகின்ற ஓர் இழுக்கான நிலைமையே ஆகும்.

ஆகவே, இந்த நிலைமையை மாற்றுகிருர் நைஜாம்—ஆங்கி



லத்தை விரட்டுகிருர்—ஆங்கி லத்துக்குப் பதிலாக ஆங்கிலம் வீற்றிருக்கும் இடத்தில் நம் நாட்டு மொழிகளை அழைத்து வந்து அமரவைக்கிருர் என்ப தைக் கேட்டபோது நல்லறிவா ளரின் சிந்தையெல்லாம் மகிழ்ந் தது. அவர்களின் சொல்லி லெல்லாம், இன்பம், துள்ளிக் குதித்து ஆநந்த கீதம் பாடிற்று.

ஹைதராபாத்தில் உள்ள மக் களில் மிகப் பெரும்பாலோர் பேசும் மொழிகள், நாம் முதலி லேயே தெரிவித்திருக்கிருேம், தெலுங்கும் கன்னடமுமாகும்.

ஆகவே, தெலுங்கையும் கன் னடத்தையும் தான், ஹைதரா பாத் மன்னராகிய நிஜாம், உஸ் மானியா பல்கலைக் கழகத்தின் போதனு மொழியாக ஆக்குவார் என்று எல்லோரும் எதிர்பார்த் தனர்.

அப்படிச் செய்வதுதான் நியாயம்—முறை—ஒழுங்கு.

ஆங்கிலம் அந்நிய மொழி என்ற காரணத்தால்தான் போதனுமொழிஎன்கிற பீடத்தி லிருந்து அதுவிரட்டப்படுகிறது.

ஆகவே அந்தப் பீடம் இனி ஹைதராபாத் மக்களிற் பெரும் பாலோரின் சொந்த மொழிக ளாகிய தெலுங்குக்கும் கன்ன டத்திற்கும்தான் கிடைக்க வேண்டும். அப்படிக் கிடைக் கும்படி பார்த்துக் கொள்வது தான் ஹைதராபாத் நிஜாமின் கடமை.

ஆனல் அவரோ அந்தக் கட மையிலிருந்து தவறினர்.

தெலுங்கு, கன்னடம், இரண்டு மொழிகளையும் கை விட்டார்.

ஹைதராபாத் மக்களில் மிக மிகச்சிறுபான்மையோர் பேசும் மொழி, உருது.

அந்த உருதுவை அவசர அவசரமாகக் கைதட்டிக் கூப் பிட்டார் நிஜாம்.

உஸ்மானியா பல்கலைக் கழ கத்தின் போதனு மொழியாக ஆக்கினர் அந்த மொழியை.

மிகப் பெரும்பான்மையோ ரின் தாய்மொழிகளாகிய கன்ன டத்தையும் தெலுங்கையும் கை விட்டுவிட்டு, மிகச் சிறுபான்மை யோரின் தாய்மொழியாகிய உருதுவுக்கு அரியாசனத்தை அளித்து முடிசூட்டு விழாவை யும் நடத்திவைத்தார் நிஜாம்.

நிஜாம் செய்த இந்தக் காரி யம் தவருனது. அநீதி நிறைந் தது. நியாயபுத்தி படைத்த எல்லோராலும் கண்டிக்கப்பட வேண்டியது.

தெலுங்கு, கன்னடம், உருது ஆகிய மூன்று மொழிகளையும், நிஜாம், போதனு மொழிகளாக ஆக்கியிருப்பாரானல், அவர் செயலை யாரும் கண்டித்திருக்க மாட்டார்கள். ஏனெனில் மூன்று மொழிகளும் ஹைதரா பாத் மக்களுடைய மொழிகள்.

ஆனல் மூன்று மொழிகளை யும் போதனு மொழிகளாக ஆக்காமல் ஏதாவது ஒரு மொழி யைத்தான் போதனு மொழி யாக ஆக்குவது என்கிற முடி வுக்கு நிஜாம் வந்தபோது, அந்த மூன்று மொழிகளிலே எந்த மொழி மிக அதிகமான மக்க ளால் பேசப்படுகிறதோ, அந்த மொழியைத்தான் அரியணையில் அமரவைத்திருக்க வேண்டும்.

மிகப் பெரும்பாலோரால் பேசப்படுகிற மொழி எது என்று பார்த்தால் அது தெலுங்கு, அல்லது கன்னடமா கத்தான் இருக்கமுடியும்.

ஆனல் நிஜாமோ உருதுவுக்கு 'முடி'யை அளித்தார். கன்ன டத்தையும் தெலுங்கையும் கவ னிக்க மறந்தார்.

நியாயத்தை மறந்து, நியாய மாகச் செய்யப்பட வேண்டிய காரியத்தை மறந்து, உருது மொழிக்கு முடிசூட்டு விழா நடத்திவைத்தார் நிஜாம் என் ருல், அதற்குக்காரணம், உருது, அவருடைய தாய்மொழி.

தன்னுடைய மொழி உருது என்கிற ஒரே ஒரு காரணத்திற் காக, நிஜாம், தெலுங்குக்கும் கன்னடத்திற்கும் கிடைத் திருக்க வேண்டிய இடத்தை, நியாயமற்ற முறையில், உருது வுக்குக் கொடுத்துவிட்டார்.

அவருடைய இந்த அக்கிரம மான போக்கை எதிர்த்து ஐதரா பாத் தேசியவாதிகள் அஞ்சா நெஞ்சுடன் முழக்கமிட்டனர் அந்தக் காலத்தில்.

அந்த வீர முழக்கத்தின் சில பகுதிகளைத்தான் இந்தக் கட் டுரையின் தொடக்கத்தில் நாம் தந்திருக்கிருேம்.

அந்த ஹைதராபாத்திலே, அன்றைய தினம், இந்த அக்கிர மம் நடைபெற்றதோ அதே ஹைதராபாத்திலே, இன்றைய தினம், வேருேர் அக்கிரமம் நடைபெற்றிருக்கிறது.

ஆனல் ஒரே ஒரு வேறுபாடு! ஒரே ஒரு வேறுபாடு—ஆனல் மிக முக்கியமான வேறுபாடு—நாட்டு மக்கள் எல்லோரும் சற்று கூர்ந்து கவனிக்க வேண் டிய வேறுபாடு.

அந்த வேறுபாடு இதுதான்:-

அன்றைய தினம், "ஆருமா இந்தப் போக்கு—முறைதானு இந்தக் காரியம்?" என்று வீர முழக்கமிட்டார்களே வீரர் ஐத ஹாரின் சீடர்கள் அதாவது தேசியவாதிகள், அவர்கள்,இன் றைய தினம், வாய்மூடி மௌனி களாகக் காட்சி தருகிருர்கள்.

அன்றையதினம் நடைபெற்ற தைவிட அதிகக் கொடுமையான அக்கிரமம், இன்றையதினம் நடைபெறுகிறது.

ஆனலும் வாயைத் திறந்து ஒரு வார்த்தையும் கூறவில்லை

(13-ம் பக்கம் பார்க்க)

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

காங்கிரஸ் கட்சியை ஆட்டிப் படைக்கும் சூத்திரக் கயிறு யாரிடம் இருப்பது—படேலிடமா? அல்லது நேருவிடமா என்கிற போட்டா போட்டிப்போராட்டம் மும்முரமாக நடந்துகொண்டிருந்த காலம் அது.

அந்தப் போராட்டத்திலே நேருவின் குதிரையாக ஆச்சாரியாரும், படேலின் குதிரையாக ராஜேந்திரரும், நேரு—படேல்—இவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ஆனல் காங்கிரஸ் கட்சியின் நிர்வாக இயந்திரம் பெரும்பாலும் படேலிடமே சிக்கிக்கொண்டிருந்த காரணத்தால், இறுதியில் படேல் தான் வெற்றியடைந்தார். நேரு, தோல்வி அணங்கைத்தான் தழுவ நேரிட்டது.

ஆச்சாரியார் கைவிடப்பட்டார். ராஜேந்திரர் ஜனாதிபதியானர்.

சிறிது காலத்திற்குப் பிறகு படேல் காலமானர்.

மேலும் சில மாதங்கள் உருண்டு மறைந்தன. இந்தியாவில் பொதுத் தேர்தல் நடத்த முடிவு செய்தார் பண்டித நேரு.

பொதுத் தேர்தல் நடந்து முடிந்த பிறகு மீண்டும் ஜனாதிபதி தேர்தல் நடைபெற்று, புதிய ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

இந்திய அரசியல் திட்டப்படி நடைபெறவேண்டிய காரியம் இது.

அப்படி நடைபெற இருக்கிற ஜனாதிபதி தேர்தலில் தன்னையே ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுப்பார் நேரு என்று ஆசையோடு கனவு கண்டுகொண்டிருந்தார் ஆச்சாரியார்.

முன்னேதான் சர்தார் படேல் உயிரோடிருந்தார். நேருவின் செல்வாக்கை விட அவருடைய செல்வாக்கு காங்கிரஸ் கட்சியில் அதிகமாக இருந்த காரணத்தால் அவருடைய அன்புக்குப் பாத்திரமான ராஜேந்திரர் ஜனாதிபதியானர். தான் வரமுடியாமல் போய்விட்டது, இப்போதோ படேல் இல்லை. நேருவிடமே காங்கிரஸ் கட்சியின் சகல அதிகாரங்களும் குவிந்துகிடக்கின்றன, இந்த நிலையில் நேரு மனம் வைத்தால் தன்னை ஜனாதிபதியாக ஆக்குவது மிக மிக எளிய காரியம். ஆகவே தன்னையே தேர்ந்தெடுப்பார் நேரு என்று ஆச்சாரியார் ஆகாயக் கோட்டை கட்டலானர்.

ஆனல் நேரு வேறு விதமாக எண்ணலானர்.

சர்தார் படேல் உயிருடன் இருந்த காலத்தில் ஆச்சாரியார் ஜனாதிபதியாக வந்திருப்பாரானல், அதனல் நேருவுக்கு அனுகூலம் இருந்திருக்கும். சர்தார் படேலுக்கும் பண்டித நேருவுக்குமிடையே அடிக்கடி ஏற்பட்டுவந்த செல்வாக்குப் போட்டிகளில், ஆச்சாரியார் நேருவின்பக்கம் இருந்து, நேருவின் கைகளை வலுவாக்கியிருப்பார். நேரு அனுகூலமடைந்திருப்பார். இந்தக் காரணத்திற்காகத்தான் ஆச்சாரியாரை நேரு அப்போது விரும்பினர்.

ஆனல் இப்போது இருக்கிற நிலைமையோ முற்றிலும் வேறானது.

படேல், இப்போது இல்லை.

காங்கிரஸ் கட்சியின் சகல அதிகாரங்களும் நேருவிடம் குவிந்து கிடக்கின்றன.

நேருவே காங்கிரஸ், காங்கிரஸே நேரு என்று சொல்லப்படவேண்டிய அளவுக்கு நேரு, காங்கிரஸ் கட்சியின் சர்வாதிகாரியாக விளங்குகிறர்.

அவரை ஏன் என்று எதிர்த்துக் கேட்கக்கூடிய தகுதியோ திறமையோ தைரியமோ படைத்தவர்கள் இப்போதுயாருமில்லை காங்கிரசில்;

நேருவின் சித்தம் எங்கள் பாக்கியம் என்று கூறியபடி, பண்டித நேருவுக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் புரிந்துகொண்டிருக்கின்றனர். எல்லாக் காங்கிரஸ்வாதிகளும்.

இந்த நிலையில் ஆச்சாரியார் ஜனாதிபதியாக வருவதால் நேருவுக்கு எந்தவித நன்மையும் கிடையாது.

நன்மை எதுவும் இல்லாததுமட்டுமல்ல, தொல்லை அதிகமாக இருக்கும்.

ஆச்சாரியார், அப்பாவியல்ல. கூர்த்தமதி படைத்தவர். நீண்ட கால அரசியல் அனுபவம் மிகுந்தவர். நேருவைவிட திறமை அதிகமாக அமைந்தவர். சூழ்ச்சிக் கலையிலோ நிபுணர். வெளிநாடுகளிலும் புகழ்பெறறிருப்பவர்.

இப்படிப்பட்ட இருபதாம் நூற்ருண்டின் சாணக்கியரை ஜனாதிபதியாக்கினல் அவர் ஏதோ தான் உண்டு, தன் பங்களா உண்டு என்று இருக்கமாட்டார் அமைதியாக,

ஏதேதோ தந்திரங்களைச் செய்து, நேருவுக்குச் சமானமாக வந்துவிடுவார்.

நேருவைவிட அதிக செல்வாக்கைப் பெற்ருலும் பெற்றுவிடுவார்.

மத்திய சர்க்காரை ஜவஹர் சர்க்கார் என்று சொல்கிற நிலை மாறி ராஜாஜி சர்க்கார் என்று சொல்லப்பட வேண்டிய நிலை ஏற்பட்டாலும் ஏற்பட்டுவிடும்.

ஆனல் ராஜேந்திரரோ அப்பாவி. சூதுவாது அறியாதவர். அரசியல் சூழ்ச்சிக் கலையைக் கற்றுத் தெளியாத எளிய மனிதர். யாருக்கும் எந்த விதத் தொல்லையையும்

## கிளைக் கழகத் தோழர்கள் கவனத்திற்கு!

(1) தி. மு. க. தலைமை நிலையம் சென்னையிலிருந்தே இயங்கத் தொடங்கிவிட்டதால், கழகச் சம்பந்தமான எல்லா கடிதப் போக்குவரத்துக்களும், சென்னை முகவரிக்கே வைத்துக்கொள்ள வேண்டுகிறேம்.

(2) பதில் கோரி எழுதும் கடிதங்களுக்கு, பதில் எழுதப் போதுமான தபால் தலை வைத்தனுப்ப வேண்டுகிறேம்.

(3) ஒவ்வொரு கிளைக்கழகமும், தனக்கென அச்சிட்ட தாள்களிலோ அல்லது ரப்பர் ஸ்டாம்ப் போடப்பட்ட கடிதங்களிலோ எழுதியனுப்பும் விஷயங்கள்தான் கவனிக்கப்படும்.

(4) அனுப்பப்பட்டுள்ள அங்கத்தினர்கள் சேர்க்கும் புத்தகங்களை விரைவில் முடித்து அனுப்பும்படியாக வேண்டப்படுகிறர்கள் உறுப்பினர் சேர்க்கும் பணியை முடிப்பதற்கான கடைசி நாள் ஜூன் 15-ந் தேதி என்பதாக பொதுக் குழு தீர்மானித்திருப்பதையும் கவனப்படுத்துகிறேம்.

(5) கழக தினத்தாள் (Daily) சம்பந்தமான கடிதங்களும் நன்கொடை நிதிகளும் தலைமை நிலையத்துக்கே அனுப்ப வேண்டுகிறேம்.

(6) எழுதப்படும் எல்லாக் கடிதங்களிலும தி. மு. க, தலைமை நிலையம, 24, சூரிய நாராயண செட்டி தெரு, ராயபுரம் சென்னை-13 என்ற முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவேண்டுகிறேம்.

ஈ. வெ. கி. சம்பத்
பொறுப்பாளர்
தி. மு. க, தலைமை நிலையம்,



கொடுக்க முடியாதவர். எவ்வளவு தான் அவர் முயன்ருலும்கூட நேருவுக்கு சமானமாகவோ, அவருக்கு அடுத்த நிலையிலேகூட வரமுடியாதவர்.

இந்த நிலையில், ராஜேந்திரர் ஜனாதிபதியாக வருவதுதான், ஜவஹர்லாலுக்கு அனுகூலம்.

ஆச்சாரியாரை ஜனாதிபதியாக ஆக்குவது, தானே நெருப்பை அள்ளித் தன் மடியில் கொட்டிக்கொள்வதுபோன்ற காரியமே யாகும், பண்டித நேருவைப் பொறுத்தவரை.

ஆகவே தான், நேரு, ஆச்சாரியாரைக் கைவிட்டு விட்டு, ராஜேந்திரரையே ஜனாதிபதியாக்குவது என்று பல மாதங்களுக்கு முன்னரே முடிவு செய்துவிட்டார்.

பண்டித நேரு இந்த முடிவுக்கு வந்துவிட்டார் என்பது தெரிந்தவுடனேதான் ஆச்சாரியார், உடல் நலத்தின் மீது பாரத்தைப் போட்டு, மத்திய சர்க்காரில் தனக்கிருந்த அமைச்சர் பதவியை உதறி எறிந்துவிட்டு, சென்னைக்கு வந்து சேர்ந்துவிட்டார் பஜகோவிந்தம் பாட;

ஒப்புக்கு பஜகோவிந்தம் பாடிக்கொண்டிருந்தாரே தவிர அவருடைய உள்ளத்தில் எப்படி நேருவைப் பழிக்குப் பழி வாங்குவது என்ற எண்ணமே மேலோங்கியிருந்தது.

அதற்கு ஏற்ற நேரத்தையும் சூழ்நிலையையும் எதிர்பார்த்துப் பொறுமையுடன் காத்துக் கொண்டிருந்தார் ஆச்சாரியார்.

எதிர்பார்த்த நேரம் வந்தது, சென்னை மாகாணத்தின் பிரதமர் பதவியை ஆச்சாரியார் ஏற்கவேண்டிய சூழ்நிலை உருவாயிற்று.

தான பிரதமராக வருவது உறுதி என்கிற நிலைமை எந்த விநாடியில் ஏற்பட்டதோ, அந்தவிநாடி முதலே, நேருவின் மீது, மறைமுகமாக ஆனல் நேருவின் உளளத்தை வாட்டி வதைக்கும் விதமாகப் போர் தொடுக்கத் தொடங்கிவிட்டார். "மாமபலதது மஹரிஷி"!

தன்னை ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்காத காரணத்தால் தன் உள்ளத்தில் கொதித்துக்கொண்டிருந்த கோபத்தை நேருவின்மீது தாராளமாகப் பொழியத் தொடங்கிவிட்டார்,

ஒவ்வொரு மாகாணத்திலேயும் காங்கிரஸ் கட்சியின் சார்பில பிரதம மந்திரியாக வருகிறவர்கள் பொதுத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்க வேண்டுமே தவிர, தேர்தலில் தோற்றுப்போனவர்களாகவோ, தோற்ற பிறகு வேறுவிதமாக மேல்சபைக்குவந்தவர்களாகவோ இருக்கக்கூடாது.

இது,பண்டித நேருவின் கண்டிப்பான கட்டளை — காங்கிரஸ்காரர்களுக்கு.

இந்தக் கட்டளையைத் துளியும் மதிக்கவில்லை ஆச்சாரியார்.

தேர்தலுக்கு நிற்காமலேயே, கவர்னரின் நாமினேஷன் மூலமாகவே, பிரதமராகிவிட்டார் ஆச்சாரியார்.

தேர்தலில் வெற்றி பெருதவர்கள் யாரும் மந்திரியாக வரக்கூடாது என்று தாக்கீது விடுத்தார் நேரு.

அந்தத் தாக்கீதைத் தவிடுபொடியாக்கிவிட்டு அரசுகட்டில் ஏறிவிட்டார் அன்பர் ஆச்சாரியார்.

தன்னுடைய கட்டளை தன் கண்ணெதிரிலேயே அவமானப்படுத்தப்படுவதைப் பார்க்கிறர் நேரு.

பார்த்து என்ன செய்யமுடியும்? வெளிப்படையாக எதிர்த்துப் பேச முடியுமா ஆச்சாரியாரை? எதிர்த்தால் ரசாபாசமாகிவிடாதா? நேரு-சி. ஆர்.ஆர். சண்டை என்று பத்திரிகைகளில் செதி அடிபடத் தொடங்கிவிடாதா? ஆகவேமௌனஉருவாகிவிட்டார் நேரு. ஆச்சாரியாரின் செய்கையைக் கண்டும் காணுதது போல இருந்துவிட்டார்.

"என்னை ஜனாதிபதியாக ஆக்காமல் தென்னுட்டுக்கு விரட்டியடித்தீரே நேருவே! இதோ பாரும்! உம்முடைய கட்டளையை நான் செல்லாக் காசாக்கிவிட்டேன்! உம்முடைய அதிகாரத்தைத் தவிடு பொடியாக்கிவிட்டேன்! இப்போது என்ன சொல்லுகிறீர் நீர்?" என்று ஆச்சாரியார், நேருவைப் பார்த்துக் கேட்பதுபோலிருந்தது, அவர் நாமிநேஷன் மூலம் பிரதம மந்திரியாக வந்த அந்தக் காட்சி.

* * *

திருவாங்கூர் — கொச்சி சட்டசபையின் காங்கிரஸ் கட்சித் தலைவர், பிரதம மந்திரியாக ஆனவுடனே டில்லிக்கு ஓடினர் நேருவைக் காண.

இன்னின்னரை மந்திரிகளாக்கப் போகிறேன் — உமக்கு சம்மதந்தானு என்று கேட்டார்.

நேரு, யார் யாரை மந்திரிகளாக்கலாம—தவறில்லை என்று கூறி

(15-ம் பக்கம் பார்க்க)

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

எப்படிப் பார்த்தாலும் சரி, ஆச்சாரியார் வகுத்துள்ள புதிய திட்டம் காரணமாக, பிராமணரல்லாத (பிற்பட்ட) என் ஜி.ஓ.க்களுக்குக் கிடைக்கும்நன்மையைவிட இரண்டு மடங்கு நன்மை பிராமண என். ஜி. ஓ.க்களுக்குக் கிடைக்கிறது.

* செய்கிற உதவி மிகவும் கொஞ்சம்

* அந்த உதவியும் பிறர் பணத்தில்

* அப்படிச் செய்யும் உதவியில் பெரும் பகுதி பிராமண சமுதாயத்திற்கு

* என்றாலும் புகழ், பாராட்டு ஜே கோஷம் ஆச்சாரியாருக்கு!

அவ்வளவு திறமையாக, அவ்வளவு சூழ்ச்சிகரமாக, அவ்வளவு கனிவு கனிவுகனோடு உதவி திட்டத்தை வகுத்திருக்கிறர் ராஜாஜீ!

அவரைத் திறமைசாலி என்கிறர்கள் அவருடைய இனத்தவர்கள்.

ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் நாம்.

அற்பமான ஒரு காரியத்தைச் செய்துவிட்டு மிகப் பெரியதோர் உதவியைச்செய்தவர் போலவுலகுக்குக் காட்சி தருகிறர் ஆச்சாரியார்!—இது திறமைதானே!

பிறர்பணத்தில் உதவி செய்யும்படிஏற்பாடு செய்துவிட்டுதானே உதவி செய்வது போல அற்புதமாக நடித்திருக்கிறர்ஆச்சாரியார் !-இதுவும் திறமைதானே!

பிராமண சமுதாயத்திற்கு அதிக அளவு நன்மையும் அல்லாத சமூகத்திற்குக் குறைந்த அளவு நன்மையும் கிடைக்கும்படி திட்டத்தை வகுத்துவிட்டு, எல்லா சமூகங்களுக்கும் சம வசதி செயதுகொடுத்ததுபோல காட்டிக் கொள்கிறர—இதையும் திறமை என்று தானே கூறவேண்டும்! இல்லையா?

நீங்களே கூறுங்கள்!

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

தேசியவாதிகள் இன்றைய தினம்.

அன்றைய தினம் அநீதியான பாதையில் நடந்து சென்றவர், ஹைதராபாத் நிஜாம்.—ஆகவே சர்வதாராளமாகக் கண்டனக் கணைகள் புறப்பட்டன தேசிய வீரர்களின் பாசறைகளிலிருந்து.

ஆனால் இன்றைய தினம், முறையற்ற மார்க்கத்தில் மிக வேகமாக நடந்து செல்பவர் களோ, ஜவஹர் சர்க்கார்.—ஆகவேதான் தேசிய முகாம், இன்றைய தினம் மௌனவிரதம் பூண்டு கொண்டிருக்கும் முனிபுங்கவர்கள் குடிசையாகக் காட்சி தருகிறது.

ஹைதராபாத்தில், தெலுங்கையும் கன்னடத்தையும் பேசுபவர்கள் ஏராளம். உருதுவைப் பேசுபவர்கள் குறைவு.

குறைவான எண்ணிக்கை தான் என்றாலும் உருதுவைப் பேசுபவர்களும் இருக்கிறார்கள் ஹைதராபாத்தில்.

ஹைதராபாத் மக்களிலே ஒரு சாராருக்காவது தாய்மொழியாக இருக்கிறது உருது.

ஹைதராபாத்துக்கு உருதும் ஒரு தாய்மொழி. அந்நிய மொழி அல்ல.

ஆனால், ஹிந்தி, ஹைதராபாத்தைப் பொறுத்த அளவில், முற்றிலும் அந்நியமொழி.

ஆங்கிலம் எந்த அளவுக்கு அந்நிய மொழியோ ஹைதராபாத்திற்கு, அதே அளவுக்கு அந்நிய மொழிதான் ஹிந்தியும்.

ஆங்கிலம் போதனா மொழியாக இருப்பது தவறு, கூடாது, ஆகாது என்றால், ஹிந்தி, போதனா மொழியாக இருப்பதும் தவறு, கூடாது, ஆகாது தான்.

உருதுமொழியாவது, ஹைதராபாத் மக்களில் ஒரு சிறு சாராருக்காவது, தாய்மொழியாக இருக்கிறது. ஹிந்திமொழிக்கு அந்தத் தகுதியும் கிடையாது.

உருதுமொழி, ஐதராபாத் பல்கலைக் கழகத்தின் போதனா மொழியாக ஆக்கப்பட்டது அக்கிரமம் என்றால், ஹிந்திமொழிக்கு அந்த இடம் தரப்படுவது, அளவுகடந்த அக்கிரமமாகும்.

இந்த அளவுகடந்த அக்கிரமத்தைத்தான் மிக மிக ஆநந்தத்தோடு புரிந்திருக்கின்றனர் ஜவஹர் சர்க்கார்.

ஹைதராபாத்தில் உள்ள உஸ்மானியா பல்கலைக் கழகத்தில், இனி, எல்லா பாடங்களும் ஹிந்தி மொழியில்தான் சொல்லித் தரப்படுமாம்.

அந்தப் பல்கலைக் கழகம், இனி, ஒரு ஹிந்தி பல்கலைக் கழகமாக ஜொலிக்குமாம்.

ஹிந்திமொழியின் வளர்ச்சிக்கும் எழுச்சிக்குமான பல்வேறு கலாசாரப் பணிகளைப் புரிவதற்கான ஒரு நடுவிடமாக இனி ஒளி வீசுமாம் அந்தப் பல்கலைக் கழகம்.

இதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்காக பெரிய மனிதர்கள் பலரடங்கிய ஒரு குழுவையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள் ஜவஹர் சர்க்கார்.

நியாயமா இந்தக் காரியம்?

நியாயம் என்றால் எந்த வகையில் நியாயம்?

மிகப் பெரும்பாலோரின் தாய்மொழிகளாகிய தெலுங்கையும் கன்னடத்தையும் விட்டுவிட்டு மிகச் சிறுபாலோரின் தாய் மொழியாகிய உருதுவைப் போதனா மொழியாக்கியது அக்கிரமம் — அநீதி — அநியாயம் என்று முன்னர் முழக்கமிட்டார்கள் தேசியவாதிகள். இப்போதோ, ஐதராபாத் மக்களிலே ஒரு வருக்குக்கூடத் தாய்மொழியாக இலலாத ஹிந்தி, அந்த இராஜ்யத்துப் பல்கலைக் கழகத்தின் போதனா மொழியாக ஆக்கப்பட்டிருக்கிறது. இந்த அக்கிரமத்தை, எந்த வகையில் நியாயம் என்று கூற இருக்கிறார்கள் அசோக சக்ராதிகள்.

"உஸ்மானியா பல்கலைக் கழகத்தில் ஹிந்தியை, இந்திய சர்க்கார் திணித்திருப்பது கண்டு நான் ஆச்சரியப் படுகிறேன். பல மொழிகளைப் பேசும் மக்களைக் கொண்ட ஒரு இராஜ்யத்தில் அங்கில்லாத ஒரு மொழியைக் கொண்டுபோய்த் திணிப்பது எவ்விதத்திலும் நேர்மையல்ல."

கவனியுங்கள், தேசியவாதிகளே, சற்று கவனியுங்கள், இந்த வாசகங்களை வீசியிருப்பவர் ஒரு தேசியவாதி! சூனா மானா அல்ல! தி. மு. க. அல்ல! சமீப காலம் வரையில், அகில இந்திய காங்கிரஸ் கட்சியின் பொதுச் செயலாளராக இருந்தவர், சங்கர் ராவ் தேவ்.

அந்த சங்கர் ராவ் தேவ் தான் கூறியிருக்கிறார் ஜவஹர் சர்க்காரின் இந்தக் காரியம் நேர்மையானது அல்ல என்று.

பண்டித ஜவஹர்லால் நேருவுக்கு மிகவும் பிடித்தமானவர், சங்கர் ராவ் தேவ்.

மறைந்த உத்தமர் காந்தியடிகளின் பிரதம சீடர்களில் முக்கியமானவர், சங்கர் ராவ் தேவ்

காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சிக்காக நெடுங்காலமாகப் பாடுபட்டுவந்திருக்கும் பெருமை மிகுந்தவர், சங்கர் ராவ் தேவ்.

தேசத் துரோகக் கூட்டத்தைச் சேர்ந்தவரல்ல—"மாஸ்கோ கூலி" அல்ல—காஞ்சீபுரத் துப் பாதையில் நடப்பவரல்ல—தேசபக்தியிலே பிறந்து தேச பக்தியிலே வளர்ந்து தேசபக்தியே உருவமாக இருக்கும் ஒரு தலை சிறந்த தேசபக்தர், சங்கர் ராவ் தேவ்.

அப்படிப்பட்டவர்தான் கூறியிருக்கிறார் ஹிந்தியை ஹைதராபாத்தில் திணித்திருப்பது நேர்மையற்ற செய்கை யென்று.

எங்கேயோ, மூலையிலோ முடுக்கிலோ யாரும் கவனிக்காத இடத்திலோ அல்ல அவர் சொற்களைக் கூறியிருப்பது.

சென்னை தியாகராய நகரில் உள்ள ஹிந்தி பிரசார சபாவில் 5—5—52 அன்று மாலை ஒரு விரிவுரை ஆற்றினார் சங்கர் ராவ் தேவ்.

அந்த விரிவுரையிலேதான் காணப்படுகிறது அவருடைய இந்த விளக்கவுரை.

மேலும் அவர் தெரிவித்திருக்கிறார்:—

"சர்க்காரின் உண்மையான நோக்கம், உஸ்மானியா சர்வகலாசாலை, கலாச்சார விஷயங்களில் ஒரு மத்திய கேந்திரமாக விளங்க வேண்டுமென்பதுதான் என்றால்,முதன் முதலில் அந்த ராஜ்ய மொழிகளான தெலுங்கு, கன்னடம்,மராத்தி ஆகிய மொழிகளின் வளர்ச்சிக்கு வழிவகை தேடியிருக்கவேண்டும். ஆகையால், உஸ்மானியா சர்வகலாசாலையில் ஹிந்தியைப் போதனா மொழியாக வைத்திருப்பதை உடனே சர்க்கார் எடுத்துவிட வேண்டுமென்று கோருகிறேன்"

தெளிவாக இருக்கின்றன சங்கரின் வாசகங்கள்.

மிகத் தெளிவாக இருக்கின்றன.

ஹைதராபாத் பல்கலைக் கழகத்தில் ஹிந்தி திணிக்கப்பட்டிருப்பது நேர்மையற்ற செயல், முறையற்ற நடத்தை, அக்கிரமமான நிகழ்ச்சி என்பதை அழகாக விளக்கியிருக்கிறார் சங்கரனார்.

தென்னாட்டைத் தன் நிரந்தர அடிமையாக்கி, தான் இட்ட ஏவல்களையெல்லாம் உடனே நிறைவேற்றுகிற பணியாளாக வைத்திருக்க வேண்டும் என்று எண்ணமிட்டுவிட்டது வடநாடு

அந்த எண்ணத்தை நிறைவேற்ற, வடநாடு, கையாள்கிற கருவிகளிலே ஒன்று ஹிந்தி ஏகாதிபத்யம்.

அந்த ஹிந்தி ஏகாதிபத்யம் தென்னாட்டின்மீது அடிக்கடி நடத்திவருகிற பல்வேறு படையெடுப்புகளில் ஒன்றுதான் உஸ்மானியா பல்கலைக் கழக நிகழ்ச்சி.

இல்லையென்று மறுக்கமுடியுமா யாராவது?

மறுத்துவிடலாம்—மறுப்பது எளிது — ஆனால் அதற்குரிய ஆதாரம் காட்டமுடியுமா?

கேட்கிறோம்தேசியவாதிகளை பதில் கூறட்டும், கூற முடியுமானால்.

—

## அறிவிப்பு

29—4—52-ல் ஒண்டிப்புதூர் தி.மு.க. செயற்குழு கூட்டம் தணைச்செயலாளர் பொ. அய்யாசாமி தலைமையில் கூடிற்று. திராவிட முன்னேற்றக் கழக இலட்சியத்திற்கு மாறாக, இராமாயண நாடகத்தில் நடிக்கும் தோழர்கள் B. M. இராமலிங்கம் (வி. உ.) S. M. வெங்கட்ராமன் ஆகிய இருவரை திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து விலக்கப்பட்டிருக்கிறது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு
சொ. செயராமன்
செயலாளர்,
திராவிட முன்னேற்றக் கழகம்
ஒண்டிப்புதூர்.

## திராவிட முன்னேற்ற கழகம் கண்டி கிளை நிலையத் திறப்பு விழா

இலங்கைத் திராவிட முன்னேற்ற கழகத்தின் கண்டி கிளையத் திறப்பு விழா, சென்ற 27—4—52 ஞாயிற்றுக்கிழமை மாலை, கண்டி திருக்கோணமலை வீதியிலுள்ள 'வின்ஸ்' கட்டிடத்தில் தோழர் நம்பிக்கையின் தலைமையில் நடைபெற்றது. சுமார் ஆயிரம் தோழர்கள் வந்து சிறப்பித்தனர். தோழர் வரகுணம் அனைவரையும் வரவேற்றார்.

தோழர் காசியப்பா, கழகக் கொடியை ஏற்றிவைத்து அதன் வர்ணங்களால் குறிக்கப்படும் பொருள்களையும் நோக்கங்களையும் பற்றி சுருக்கமாகவும் உருக்கமாகவும் எடுத்துரைத்தார்.

பொதுச் செயலாளரான தோழர் இளஞ்செழியன் விழாவைத் திறந்து வைத்துப் பேசுகையில் தமிழரின் இன்றைய சீர்கேடான நிலைமை சாதி சமயப் பூசல்களாலானது என்றும், ஆரியமாயையில் அவை முற்றாயும் அறிவிலிகளாக, வீழ்ந்து போக்கடைந்து கிடக்கும் தமிழர் ஆளவந்தாரின் அகக்கணக்கை கண்ணுற்றும் வாளாயிருப்பது மதியீனமென்றும், கண்விழிப்புடனிருந்து தமிழினத்தைக் காக்கப் பாடுபடவேண்டும் என்றும் கூறினார்.

வாலிப உலகம்—அன்றும் தமிழும்—சமூக சீர்திருத்தம்—தமிழரின் இன்றைய நிலை—திருக்குறளின் மகிமை—இவைபற்றி, திருவாளர்களான அருணன், க. ப. சிவம்—பாலையா பெரியய்யா இவர்கள் பேசினர்,

இறுதியாக, தலைவர் முடிவுரை கூற கூட்டம் முடிவுற்றது.

கண்டிக் கிளையின் நிர்வாகிகளைத் தெரிந்தெடுத்த பின்னர் கண்டியை மாவட்டமாக்குவதற்கும், இந்தியாவிலுள்ள தலைவர்களான தோழர் கருணாநிதி சிற்றரசு முதலியோரை இங்கும் தருவிக்க ஆலோசிக்கப்பட்டது.

தமிழ்ப் பொது ஜனங்களையும் கழகத்தில் சேர்ந்து ஆதரிக்க வேண்டிக் கொண்டனர்,

இப்படிக்கு
நம்பிக்கை,
கண்டிச் செயலாளர்,

# இங்கல்ல! அங்கே!

இந்தியாவில் மிகப் பெரிய அணைக்கட்டு ஒன்று கட்டப்பட்டு வருகிறது.

வேகமாக ஓடிவரும் ஆறு ஒன்றைத் தடுத்து நிறுத்தி, அதன் குறுக்கே மிகப் பெரிய அணை ஒன்றை எழுப்பி, அணைக்குப் பின்னுல் மாபெரும் நீர்த்தேக்கம் ஒன்றை அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டு, வேலை, மிக ஜரூராக நடைபெற்று வருகிறது.

அணைக்கட்டையும் நீர்த்தேக்கத்தையும் ஒட்டி, ஒரு பெரிய மின்சார உற்பத்தி நிலையம் அமைக்கவும் முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

நீர்த்தேக்கம் கட்டி முடிக்கப்பட்டதும், அதில் தேக்கப்படும் தண்ணீர், ஆண்டுதோறும், இருபத்தொன்று இலட்சம் ஏகர் நிலங்களுக்குப் பாய்ந்து அந்த நிலங்களை யெல்லாம் ஏராளமான விளைவைத் தரும் தங்க வயல்களாகமாற்றிவிடும் என்று அணைக்கட்டு நிபுணர்கள் உறுதி கூறுகின்றனர்.

அணைக்கட்டு-நீர் தேக்கம்-மின்சார நிலையம் இந்த மூன்று திட்டங்களுக்குமாக மொத்தம் முப்பத்து மூன்று கோடி ரூபாய் செலவாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

அணைக்கட்டின் உயரம் 800 அடி இருக்குமென்றும், நீர்த்தேக்கத்தில் 86 லட்சம் அடி தண்ணீர் பிடிக்குமென்றும், மின்சார நிலையத்தில் ஆண்டுதோறும் இரண்டு லட்சத்து நாற்பதாயிரம் கிலோவாட் மின்சாரம் உற்பத்தியாகுமென்றும் ஆட்சியாளர்களின் அறிக்கை தெரிவிக்கிறது.

சென்ற நான்கு ஆண்டுகளாகக் கட்டப்பட்டு வருகிறது இந்த அணைக்கட்டு.

இதை முழுமையாகக் கட்டிமுடிக்க இன்னும் எட்டு அல்லது ஒன்பது ஆண்டுகள் ஆகும் என்று சொல்லப்படுகிறது.

இந்த அணைக்கட்டுத் திட்டம் கட்டிமுடிக்கப்பட்டு விட்டால், இந்தியாவில்மட்டுமல்ல, கிழக்கு திசை நாடுகளிலேயே, இந்த அணைதான் மிகப் பெரிய அணையாக இருக்குமாம்.

"ஓஹோ! இவ்வளவு பெரிய அணைக்கட்டா தென்னிந்தியாவில் கட்டப்பட்டு வருகிறது! பரவாயில்லையே! இந்த அணை கட்டி முடிக்கப்பட்டு விட்டால் அப்புறம் தென்னாட்டில் உணவுப் பஞ்சமே இருக்காது போலிருக்கிறதே!" என்று வாசகர்கள் கருதக்கூடும்.

ஆனால் வாசகர்கள் நம்மை மன்னிக்கவேண்டுகிறோம். இந்த அணை கட்டப்பட்டு வருவது தென்னிந்தியாவில் அல்ல—வட இந்தியாவில்—உத்தர பிரதேச மாகாணத்தில்!

இவ்வளவு பெரிய அணைக்கட்டுத் திட்டத்தை தென்னிந்தியாவில் கட்டவிடுமா வட இந்திய ஆதிக்கத்தில் உள்ள அகில இந்திய காங்கிரஸ்

வடநாட்டில்தான் தோழர்களே, வடநாட்டில்தான் இந்த மாபெரும் அணை கட்டப்பட்டு வருகிறது.

அப்படியானுல் தென்னாட்டின் கதி என்ன ஆவது என்று கேட்கிறீர்களா?

என்ன ஆவது?

இப்படிப்பட்ட அணைக்கட்டுத் திட்டங்களை யெல்லாம் வைத்துக் கொண்டு வடநாடு ஏராளமான அளவு உணவுப் பொருளை உற்பத்தி செய்துவிடும்.

அதன் பிறகு, தென்னுடு, "ஐயா, எமக்குக் கொஞ்சம் உணவு தாரும்" என்று வடநாட்டிடம் கையேந்தி நின்று கெஞ்சவேண்டி வரும்.

தென்னுடு தென்னுட்டவருக்காக, தனி நாடாக அமைந்தாலொழிய, திராவிடத் தனியரசு ஏற்பட்டாலொழிய, தென்னுட்டுக்கு நல்வாழ்வு ஒருக்காலும் ஏற்பட முடியாது.

இந்த உண்மையைத் தான் உத்தரப் பிரதேசத்தில் உருவாகிக் கொண்டிருக்கும் அணைக்கட்டு உலகுக்கெல்லாம் எடுத்துக் கூறிக்கொண்டிருக்கிறது.

இந்த அணைக்கட்டுத் திட்டம் மட்டுமல்ல, ரயில் எஞ்சின்களை உற்பத்தி செய்யும் மிகப் பெரிய தொழிற்சாலை ஒன்று கோடிக் கணக்கான ரூபாய் செலவில் இந்திய சர்க்காரால் சென்ற இரண்டாண்டுகளாக நடத்தப்பட்டு வருகிறது. அந்தத் தொழிற்சாலையின் பெயர் சித்தரஞ்சன் ரயில்வே தொழிற்சாலை அந்தத் தொழிற்சாலை அமைந்திருப்பதும் தென்னுட்டில் அல்ல, வடநாட்டில்தான்!

ரசாயன எருக்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்றும் பெருந்தொகைச் செலவில் துவக்கப்பட்டிருக்கிறது டில்லி ஆட்சியாளர்களால் இந்தத் தொழிற்சாலை துவக்கப்பட்டிருப்பதும் தென்னுட்டில் அல்ல, வடநாட்டில்தான் இதன் பெயர் சிந்திரி எரு உற்பத்தி நிலையம்.

பெரிய பெரிய தொழிற் சாலைகள்.

(15-ம் பக்கம் பார்க்க)



(11-ம் பக்கத் தொடர்ச்சி)

ருரோ, அவர்களை மட்டும்தான் மந்திரிகளாக்கினுர்.

நேருவின் ஒப்புதல் கிடைத்த பிறகுதான் மந்திரிகளின் பட்டியலையே, அவர், ராஜப்பிரமுகரிடம் சமர்ப்பித்தார்.

ஹைதராபாத், மைசூர் விந்திய பிரதேஷ், மத்திய பிரதேஷ், பம்பாய், வங்காளம் என்று உள்ள எல்லா மாகாணங்களின் காங்கிரஸ் பிரதமர்களும் இப்படித்தான் டில்லிக்குச் சென்று நேருவைக் கண்டு அவருடைய சம்மதத்தைப் பெற்ற பிறகு மந்திரிகளின் பட்டியலை கவர்னர்களிடம் தந்திருக்கின்றனர்.

ஆச்சாரியாருக்குத்தான் நேருவின் மீது மட்டற்ற கோபமாயிற்றே! அவர் அப்படிச் செய்வாரா? தனக்கு யார் யார் வேண்டியவர்களோ அவர்களை யெல்லாம் மந்திரிகளாக்கினுர்—பட்டியலை எழுதினுர்-கவர்னர் மாளிகைக்குப் போனுர்—ஸ்ரீ பிரகாசாவைக் கண்டார் மந்திரிசபை அமைந்துவிட்டது.

டில்லிக்குப் போகவில்லை—நேருவைக் காணவில்லை — பட்டியலை அவருக்குக் காட்டவில்லை — அவருடைய சம்மதத்தையும் கேட்கவில்லை—தன்மனம்போன வண்ணமாகவே மந்திரிசபையை அமைத்துவிட்டார், நேருவை முற்றிலும் புறக்கணித்துவிட்டார்.

பண்டித நேருவுக்கு மற்றொரு தோல்வி! நவீன காலகாகபட்டருக்கு இன்னொரு வெற்றி!

* * *

காங்கிரஸ் கட்சி எந்த மாகாணத்தில் மந்திரிசபை அமைத்தாலும் அந்த மந்திரிசபையில் காங்கிரஸ் கட்சியைச் சேராத வேறு யாரையும் மந்திரிகளாகச் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்பது, பண்டித நேரு, காங்கிரஸ்வாதிகளுக்கு விடுத்துள்ள பல கட்டளைகளில் ஒன்று.

மற்ற எல்லா மாகாணங்களிலும், மந்திரிசபையை அமைத்த காங்கிரஸ்வாதிகள் இந்தக் கட்டளையை மனப்பூர்வமாகஒப்புக்கொண்டிருக்கின்றனர்.

இந்த மாகாணத்திலேயும், ஆச்சாரியாரைத் தவிர வேறு எந்தக் காங்கிரஸ்காரர் முதலமைச்சராக வந்திருந்தாலும் இந்தக் கட்டளையை எழுத்துக்கெழுத்து நிறைவேற்றியே இருப்பார்கள்.

ஆனல் ஆச்சாரியாருக்குத்தான் பண்டித நேருவை மட்டம் தட்ட வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டுவிட்டிருக்கிறதே!

அவர் ஒப்புக்கொள்வாரா நேருவின் தாக்கிதை!

தேர்தல் காலத்தில் காங்கிரசை எதிர்த்து அதிதீவிரப் பிரசாரம் புரிந்தவரும், காங்கிரசை அபேட்சகரைப் படுதோல்வி அடையச் செய்தவரும், காமன்வீல் கட்சித் தலைவருமாகிய ஒருவரை, தன் மந்திரிசபையில், நேருவின் கட்டளைக்கு நேர்மாறாகச் சேர்த்துக்கொண்டார் ஆச்சாரியார்.

"வேறு கட்சிக்காரர்களை மந்திரி சபையில் சேர்க்காதே" — இது, நேரு!

"சேர்க்காதேவா, அதுதானே முடியாது, இதோ பாரும் வேறு கட்சிக்காரர் என் மந்திரிசபையில் ஜொலிப்பதை!"—இது, ஆச்சாரியார்!

ஆம்! ஆச்சாரியாரின் சூழ்ச்சித் திறமைக்கு மற்றொரு வெற்றி! பண்டித நேருவின் காங்கிரஸ் தலைமைக்கு இன்னொரு தோல்வி!

* * *

வாய்ப்பு நேரிடுகின்ற வேளையிலெல்லாம் பண்டித நேருவின் தாக்கிதுகளைத் தவிடுபொடியாக்குவதென்று முடிவு செய்துவிட்டார் ஆச்சாரியார்.

அந்த முடிவை நடைமுறையில் கொண்டுவரவும் ஆரம்பித்துவிட்டார்.

பண்டித நேருவை அடிக்கடி எதிர்க்கத் தொடங்கிவிட்டார்.

நேருவின் கருத்துக்கு நேர்மாறாக மொழிவழி மாகாணப் பிரிவினையை இப்போதே நடைமுறைக்குக் கொண்டுவரவேண்டும் என்று ஆச்சாரியார் பேசத் தொடங்கியிருப்பதற்குக் காரணம் இதுதான்.

ஆச்சாரியாரை ஜனநாயகவாதியாக்க வில்லை பண்டித நேரு.

அதற்காக பண்டித நேருவைப் பழிக்குப் பழி வாங்கத் தொடங்கிவிட்டார் ஆச்சாரியார்.

காங்கிரஸ் கட்சியில் இப்போது மிச்சமாக இருக்கும் பெரிய தலைவர்கள் இருவர்தான்.

ஒருவர், நேரு!

மற்றவர், ஆச்சாரியார்!

அந்த இருவரும் இப்போது மோதிக்கொள்ளத் தொடங்கிவிட்டனர்.

காங்கிரஸ் தொண்டர்கள் இந்த விபரீத நிலையைக் கண்டு கலங்குகின்றனர்.

நாடு இந்த விசித்திரப் போராட்டத்தைக் கண்டு கைகொட்டிச் சிரிக்கிறது.

எதிர்க்கட்சிகளோ கேலி செய்கின்றன.

என்றாலும் நேரு—ராஜாஜி குத்துச்சண்டை தொடர்ந்து நடந்தபடி இருக்கிறது.

காங்கிரஸ் கட்சி கல்லறை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறது என்பது நாடறிந்த உண்மை.

இப்பவோ பின்னேயோ இன்னும் சற்று நேரத்திலோ என்று இழுத்துக்கொண்டிருக்கிறது காங்கிரஸ் கட்சியின் உயிர்.

இந்த நிலையிலே, காங்கிரஸ் தலைவர்களுக்குள்ளே இப்படி ஒரு குத்துச் சண்டை!

ஐயோ பாவம்! காங்கிரசே! உன் கதி இப்படியா ஆகவேண்டும்?

நாடு கேட்கிறது இதுபோல.

நாமும்தான் கேட்கிறேம்—காங்கிரசின் கதி இப்படியா ஆகவேண்டும்?

இப்படியா?

(14-ம் பக்கத் தொடர்ச்சி)

மகத்தான அணைக்கட்டுகள் மாபெரும் மின்சார உற்பத்தி நிலையங்கள்

எரு உற்பத்திசாலைகள்

ஆகிய எல்லா அமைப்புகளுமே வடநாட்டில்தான் உருவாக்கப்படுகின்றன, இன்றைய டில்லி ஆட்சியாளர்களால்.

அதிலே ஆச்சரியம் என்ன இருக்கிறது?

டில்லி ஆட்சி என்பதே வட இந்திய ஆட்சிதானே!

டில்லி ஆட்சியை நடத்திச் செல்லும் காங்கிரஸ் கட்சியும் வட இந்தியர்களின் ஆதிக்கத்தில் உள்ள ஒரு வடநாட்டுக் கருவிதானே!

ஒரே இந்தியா என்கிற நிலைமை இருக்கிறவரை வடநாடு தானே வளமடைய முடியும்?

ஆகவே, இந்திய அரசாங்கத்தார் தொடங்குகிற பெரிய

(16-ம் பக்கம் பார்க்க)

(7-ம் பக்கத் தொடர்ச்சி)
கோயில்களில் எவ்வளவோ கோடிக்கணக்கான பணம் குவிந்து கிடக்கிறதைப் பார்க்கிறோம்.

அண்மையில் 'தினமணி'யில் ஒரு செய்தி வந்தது. வெள்ளியாலும், தங்கத்தாலும் ஒரு லட்சம் ரூபாய் மதிப்பில் செய்யப்பட்ட ஒரு ரதத்தை மைசூர் மஹாராஜா இழுத்தார்; மகாஜனங்களும் மகாராஜாவும் பக்திப் பரவசத்தில் மூழ்கினார்கள். கும்பி கூழுக்கு வாடுகிறபோது, கொண்டை பூவுக்கு வாடுகிறது என்பார்களே அதுபோல், மக்கள் பட்டினியில் மாள, மகேஸ்வரனுக்கு வெள்ளியில் ரதம் செய்து, அதை மகாராஜாவைக் கொண்டு இழுக்கச் சொல்லி, அதற்கு ஒரு மகத்துவம் தந்து பத்திரிகைகளில் பெரியதாகப் பிரசுரம் செய்துவிடுகிறார்கள். வெள்ளியில் ரதம்! வேதனை! வியர்வை பெருக உழைத்தவன், விலா உடையப் பாடுபட்டவன், உழைப்பிற்கேற்ற ஊதியம் பெறாமல் உள்ளம் உடைந்து கிடக்கும் போது வெள்ளியில் ரதம் செய்கிறார்கள்; அதை வெட்கமின்றிப் பத்திரிகைகளில் பிரசுரம் செய்கிறார்கள். இரத்தக் கண்ணீர் சிந்துவர், நாட்டுநலனில் அக்கரை கொண்டோர்!

விக்ரகங்களில் உள்ள வெள்ளியும், ரதம் செய்ய உபயோகப்படும் வெள்ளியும், குருடர்தம் வேதனை நீக்கப் பயன்பட்டால்...? ஆகா! எத்தனைபேர் இவ்வுலகின் இயற்கைக் காட்சிகளை, இன்பப் பொருள்களை, இனிய மனைவிகளை, அழகுமொழி பேசிடும் மழலைக் குழந்தைகளைக் கண்டு மகிழ்வார்கள்? எத்தனை பேர் கண்பார்வை பெறுவர்? ஆகா! அம்மாதிரி நடக்கக்கூடிய நாள் என்று வருமோ?...

லட்சக் கணக்கான குருடர்களின் கண்பார்வையைச் சீர்திருத்த இம்மாதிரியான முயற்சிகளில் அரசாங்கம் ஈடுபடவேண்டும், கோயில்களின், மடங்களில், குவிந்துகிடக்கும் பணத்தைக் கொண்டு குருடர் வாழ்வு பெறப் பயன்படவேண்டும், குருடர் கல்வி வளரப்பயன்படவேண்டும்: குருடர் பள்ளிக்கூடங்கள் ஆங்காங்கு தோன்றி அரிய உதவி தரப் பயன்படவேண்டும். இந்த நல்ல காரியங்களுக்குப் பயன்படாத பணம் இருந்தென்ன, இல்லாமலென்ன? ருஷ்யா சென்று திரும்பிவந்த கலைவாணர் திரு. என். எஸ். கிருஷ்ணன் ஒரு கூட்டத்தில் குறிப்பிட்டார்" "புழக்கத்தில் இல்லாமல் இரும்புப் பெட்டிகளில் புதைந்துகிடக்கும் பணம், பணமல்ல. வெறும் குப்பை" ஆமாம். இந்த நாட்டுக் கோயில்களின் உள்ள பணம் இப்போது குப்பைதான்! இந்தக் குப்பையைத் தின்றுதான் கோயில் பெருச்சாளிகள் கும்மாளமிடுகின்றன. இந்தக் குப்பை, குருட்டுத்தனம் போக்கும், நல் வாழ்வு தரும் [illegible] மாறும் நாள் எந்நாளோ? அந்த நாளை விரைவில் உருவாக்கச் செய்ய வேண்டியது நமது கடமையாகும்.

---

(15-ம் பக்கத் தொடர்ச்சி)
பெரிய தொழிற்சாலைகள் யாவும் வட இந்தியாவிலேயே காணப்படுவது ஆச்சரியப்படுவதற்குரிய செய்தி அல்ல.

ஆனால் ஆச்சரியப் படுவதற்குரிய செய்தி வேறொன்றிருக்கிறது.

'ஒரே இந்தியா' என்கிற நிலை இன்று இருக்கும் காரணத்தால் தான் வடநாடு கொடுக்கிறது. தென்னாடு மெலிகிறது என்பதை நன்றாக அறிந்திருந்தும் கூட தென்னாட்டுக் காங்கிரஸ்வாதிகளிலே சிலர் இன்னமும் திராவிடநாடு தனி நாடாக ஆவதை எதிர்க்கிறார்களே, அது தான் ஆச்சரியப்பட வேண்டிய நிலைமை.

---


## போர்வாள்

### சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஓராண்டு | ரூ. | 6—8—0 |
| 6 மாதம் | ரூ. | 3—4—0 |

**போர்வாள் அலுவலகம்**
131, பிராட்வே, சென்னை-1.




Edited Printed and Published by P. C. Manickavachagam alias Kanchi Manimoliyar at Free Printers. 147, Coral Merchant St., Madras, Joint-Editor M. Ilancheliyan B.A: (Hons.)

